


டிசம்பர்] சமய பாட போதனைத் திங்களிதழ் [1975





மணிக்கவாசக சுவாமிகள்





ஸ்ரீ ஆண்டாள்

திருவள்ளுவர் ஆண்டு 2006 மார்கழித் திங்கள்.

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை - 600018.



தாழ்வுற்று வறுமை மிஞ்சி இருக்கும்
நமது சமயம் நலம்பெற

# இந்து சமூகநலப் பாதுகாப்புநிதி

சமயநெறிக் காவலர் அருள்நெறித் தந்தை

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

அவர்களின்

# பொன்விழா

நினைவாக ஏற்படுத்தப் பெறுகிறது

சிறுதுளி பெருவெள்ளம்! தாங்கள் அன்புடன் அளிக்கும்
சிறுதொகை, ஒரு பெருந் தொண்டுக்குப் பயன்படுகிறது!
இன்றே தங்கள் பங்கைச் செலுத்திட வேண்டுகிறோம!




ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

மணி 4 | திருவள்ளுவர் ஆண்டு 2006, இராக்கத மார்கழி, 1975 டிசம்பர் | ஓசை 6

இனிய அன்புடையீர்!

விநாடிகள் விரைந்து ஓடுகின்றன; நாழிகைகள் கழிகின்றன; நாட்கள் கடக்கின்றன. ஓட்டைக் குடத்துள் உள்ள தண்ணீரைப்போல ஓடும் காலத்தின் விரைவோடு நமது பேரவையின் பணி போட்டி போடவேண்டும்; வெற்றி பெற வேண்டும். அதுதானே வாழ்வியல்-வாழ்வின் நோக்கம். ஓட்டைக் குடத்தை அடைத்துத் தண்ணீரை நிறுத்த இயலாது; பெரிய ஓட்டை; ஆதலால் தண்ணீர் சிந்தி-வீணே பாழாகாமல்-எடுத்துப் பயன்படுத்துவது போல-காலத்தை வீணே-உறங்கிப் போக்காமல் பயன்படுத்தி நம்மை வளர்த்துக் கொள்ள-நமது சமுதாயத்தை வளர்த்துக் கொள்ள-சமய நெறியில் நின்று நோன்பும்-சீலமும் பெற்று-பணிகளைச் செய்யத்தானே பேரவைப்பணி! ஆற்றல் உடைய இயந்திரமே விரைந்து தொழிற்படும். ஆற்றல் உடைய மனிதனே மனிதகுலத்தை வாழ்விக்க முடியும். அந்த ஆற்றல் புலால் ஆற்றலாக இருந்தால் போரினை வளர்க்கும்; அறிவாற்றலாக இருந்தால் வழக்கு இடும்; உடல் ஆற்றல்-அறிவாற்றல் இவற்றோடு அருளாற்றல் சேருமாயின் ஆக்கப்பணி மலருகிறது. வாழ்விக்கும் அரும் பணிகள் செயற்படும். பேரவையாளர்கள் இத்தகையோராய் அமைதல் வேண்டும்.

மார்கழித் திங்கள் ஆற்றல் பெறும் திங்கள். நமக்கு நோன்பு மாதம்; திருவாதிரை, ஏகாதசி இரண்டு புனிதத் திருநாள்கள் வரும்மாதம்; திருவெம்பாவை-திருப்பாவை பாடும் மாதம் குளிரில்-குளிர்நீரில் படிதல்-உடல் ஆற்றலுக்கு ஏற்ற பயிற்சி. நாட்காலை எழுதல்-உறக்கத்தை வெல்லும் பயிற்சி; வழிபாடு செய்தல் உயர் ஆற்றலுக்குரிய பயிற்சி. பாவைப்பாட்டு பாடுதல்-ஓதுதல்-உணர்தல் பாவங்களை நீக்கும்; பார் செழிக்க மாரி பொழியும்; உயிர்கள் நலமுறும். இனிதே நோற்றிடுவீர்! பாவை மகளிரைப்போல் எல்லாரையும் அழைத்துக் கூடித் தொழுவீர்! மங்கையர்க்கரசி வழிவந்தோர்-மாதரசிகள்-பாவை நோன்பைச் செல்வச் சிறுமிகளை அணி திரட்டி முறைப்படி செய்க. நோன்பு நோற்றிடுக. பாவை ஓதுக. மழை பொழியும்; கண் நிறைந்த கணவன் கிடைப்பான்; வரதட்சணை ஒழியும்; வையகம் சிறக்கும்!

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

—:o:—

## இந்த இதழில்



"அருளோசை"
சமய பாட போதனைத் திங்களிதழ்
ஆண்டுச் சந்தா ரூ. 5-00
ஓராண்டிற்குக் குறைந்த
சந்தா கிடையாது.




### கருத்துக் கருவூலம்......

புத்தம் புதிய பொலிவுடன் வருகிற 'அருளோசை' இதழ் என் நெஞ்சில் நிறைந்து விளங்குகிறது.

கால முழுதும் வைத்துப் போற்ற வேண்டிய கருத்துக் கருவூலம்.

இதழில் வெளிவரும் அரிய கட்டுரைகளும் எழுத்துப் பட்டி மன்றமும் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன.

'அருளோசை'யின் அருட்பணி மேன்மேலும் பெருக எல்லாம் வல்ல எம்பிரானை வழுத்துகிறேன்.

புலவர். தாமரைக் கண்ணன்
அச்சிறுபாக்கம்.

### மணக்கும் கட்டுரை......

டாக்டர் அ. மா. பரிமணம் அவர்களின் 'திருமுறை அறிமுகம்' தொடர் பகுதி மணம் வீசி, எங்களை இன்பத்துள் ஆழ்த்துகின்றது.

'கச்சியப்பர் வரலாற்றுக் கட்டுரை' உயிரோவியமுள்ள வண்ணப் படங்களுடன் திகழ்வது பாராட்டுதலுக்குரியது.

கோ. கோவிந்தன்
அக்ரஹாரம்புதூர்

### சித்தம் தெளிந்தேன்

'ஐயந்தெளிதல்' பகுதி மிக நன்றாகவே உள்ளது. வினவுக்கேற்ற நறுக்குத் தெளித்தாற் போன்ற விளக்க விடை-இப்பகுதியைப் படித்து சிந்தனைத் தெளிவு பெற்றேன்.

கி. சீனிவாசன், திருச்சி




## மொழிவெறி உண்டாக்காத இலக்கியம்

நாட்டுப்பற்றை அடுத்துத் தோன்றுவது மொழிப்பற்று. மனித குலத்திற்கு மொழி இன்றியமையாதது. மொழித் தோற்றத்திற்குப் பிறகுதான்-மனித உலகம் வளர்ந்திருக்கிறது. மொழித் தோற்றத்திற்குப் பிறகு, மொழிகளால் மனித குலம் பெற்றிருக்கும் கொடைகள் பலப் பல. ஒரு மனிதன், இன்னொரு மனிதனைப் புரிந்து கொள்ள மொழியே துணை செய்கிறது. மொழி வழிதான் காதல் சிறக்கிறது; நட்பு நனி வளர்கிறது; பக்தி மலர்கிறது; நாகரிகம் தோன்றுகிறது; பண்பாடு வளர்கிறது. மனிதன் பேசத் தொடங்கிய மொழியால் இவ்வளவு பயனைப் பெற்றிருந்தாலும் மொழி, உலக வரலாற்றில் மாறுபாடுகள் வளர்வதற்கும் துணையாய் இருந்திருக்கிறது என்பதும் மறுக்க முடியாத உண்மை. ஆனால் அது மொழியின் குறையன்று. மொழிப்பற்று மனிதனுக்கு விழிபோல இன்றியமையாதது; உயிரினும் இனியது. ஆயினும் ஒருமொழி எல்லையில் சிந்தனையைச் சிறைப்படுத்தலும், அயல் மொழியை வெறுத்தலும் ஆகாது. மொழி வேறுபாடுகள் கால எல்லைகளின் மாறுபாட்டாலும், நில எல்லைகளின் தொலைவாலும் தோன்றியவையே! மொழி வேறுபாடு இயற்கையன்று. அதாவது முடிந்தால் மாற்ற முடியாததன்று. மொழிகள் தம்முள் மாறுபட்டாலும் உயர் தத்துவங்கள் மாறுபடுவதில்லை; ஆதலால் 'எனது மொழி', 'உனது மொழி' என்ற சண்டை-மனித குலத்திற்குத் தீமையையே தரும். ஒருமொழி எல்லைக்குள் சிறைப்படுத்திக் கொண்டு, சிந்தனையில் வறட்சியடைதல், வளர்ச்சிக்குத் துணை செய்யாது. மொழியில் உயர்வு, தாழ்வு பாராட்டுதலும், இன்ன மொழியில் தான் கடவுளை வணங்கலாம் என்பதும் மனித குலத்தின் ஒருமைப்பாட்டுக்கு முரணானவை. வேற்றுமைப்படுத்தும் நெறியும், ஒருமைப்பாட்டுக்குத் துணை செய்யாது. உயர்வு தாழ்வு பாராட்டுதல், அவ்வழி இகழ்தல், அல்லது ஏற்றுதல் ஒருமைப்பாட்டுக்குத் துணை செய்யாது. ஒரு மனிதன் மிகச் சிறந்த பண்பாளனாக, நாகரிகமுடையவனாக வளர்ந்து வாழ விரும்பினால், குறைந்தது ஐந்து மொழிகளையாவது படிக்க வேண்டும். வீட்டுச் சாளரங்களைச் சாத்தி விட்டால் காற்றோட்டமில்லை. அறை வெப்பத்தன்மை யடையும். அதுபோல பிறமொழிச் சாளரங்களை அடைத்து விட்டால்-மனிதன் மிகச் சின்ன மனிதனாக மாறிவிடுவான். அவனை அற்பப் புத்திகளே ஆட்டிப் படைக்கும். இன்றைய தமிழன் மிகச் சிறந்த தமிழனாக வளர-நான்கு மொழிகளையாவது கற்க வேண்டும். அவனுடைய தாய்மொழியாகிய தமிழ், தமிழோடு



உயர் கலைகளில் இணைந்து வளர்ந்துள்ள சமஸ்கிருதம், இந்தியர்கள் பலரோடு பேச இந்தி, அறிவியற் கலைகள் கற்க ஆங்கிலம், பழந் தமிழ்ப் பண்பாட்டோடு ஒத்த, கலை நாகரிகமுடைய கிரேக்க மொழி ஆகியன கற்றால், வாழ்விக்கும் புத்துணர்வு தோன்றும். தாய் மொழிப் பணியில் முழுமையாக ஈடுபட்டவர்கள், பிற மொழிகள் பயின்றாலும், தாய் மொழியை மறக்க மாட்டார்கள். மாறாகத் தாய்மொழி அறிவில் முறுகி வளர்வர். அது போலவே இந்தியாவின் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவரானாலும், தமிழைக் கற்காமல் ஒரு முழு இந்தியனாக உருப்பெற முடியாது. இங்ஙனம் பல மொழிகள் பயிற்சியும், பன்மொழி கருத்துக்கள் வெளிவரும் உணர்வும் தான் வாழ்வியலை வளர்க்கும். மொழிவழி வெறுப்பு சிந்தனையைத் தடுக்கும். அறிவுக்கு எல்லை கட்டும்; அருளுணர்வைத் தடுக்கும்; ஒருமைப்பாட்டுக்கு இடையூறாக முரண்பாடு களைத் தோற்றுவிக்கும். இதனை நன்கு உணர்ந்த திருவள்ளுவர்-தன் நூல் முழுவதும் மொழியின் பெயரைக் குறிப்பிடவில்லை. திருவள்ளுவரின் மொழி-தமிழ்தான் என்பதற்குச் சான்று ஏது? திருவள்ளுவர் எந்த ஒரு மொழியையும் எடுத்துக் கூறவில்லை. ஆனால் அவர் பல நூல்களின் கருத்தை ஏற்றுக் கொண்டுள்ளார் என்பதற்கு நிறையச் சான்றுகள் உண்டு.

“பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் யெல்லாம் தலை”

என்ற திருக்குறளும்,

“உலகத்தார் உண்டதென்ப தில்லென்பான் [வையத்து
அலகையா வைக்கப் படும்”

என்ற திருக்குறளும் எண்ணத்தக்கன. பரந்த தேசியத் தன்மைக்கு, மொழிப்பற்று தடையாக இருக்கக் கூடாது. திருக்குறள் எந்த ஒரு மொழிப்பற்றையும் வளர்க்கவில்லை. ஆதலால் “திருக்குறள் ஒரு தேசீய நூலாதற்குரிய” தகுதி முழுதும் பெற்றிருக்கிறது.

(தொடரும்)

---

## புண் சுமந்த பொன்மேனி

செந்தமிழ் நூல்களை ஐயந்திரிபறக் கற்றுத் துறைபோய முற்றறிவுடைய புலவர் ஒருவர் வறுமையால் வாடினார். செல்வர்களிடம் சென்று தம் குறையிரந்து பொருள் வேண்டினார். பலகாலும் போய்வந்தார்; பயனில்லை. அலைந்து அலைந்து கால்கள் புண்கள் ஏற்பட்டன. செல்வர் பலர் வீட்டிற்குச் சென்று திரும்பும்போதெல்லாம் வாசல்கள் இடித்துத் தலையில் புண் உண்டாயிற்று. இந்த நிலையில் தம் செந்தமிழ்ப் புலமையை எண்ணி நெஞ்சம் புண்ணாயினர். இதற்குத் தீர்வுகாண வேண்டுமே! சிவபெருமானிடம் சென்று முறையிட்டார். அதற்குப் பெருமான், “அப்பனே! நான் பட்ட புண் கொஞ்சமல்ல. பிட்டுக்கு மண் சுமந்தபோது பாண்டியன் பிரம்படியால் எற்பட்டபுண் முதுகில்; கண்ணப்ப நாயனார் செருப்புக் காலால் உதைத்த புண் முகத்தில்; பாண்டவரில் ஒருவனான அர்ச்சுனன் வில்லால் அடித்த புண் ஒருபக்கம்; இவற்றையெல்லாம் பார் என்று காட்டினார்” என்று காட்டினார். இதைச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிறார் புலவர். பாட்டைப் பார்ப்போம் :

வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசல்தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சில் புண்ணும்
திருமென்றே சங்கரன்பால் சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்ல பிரம்படியாற் பட்டபுண்ணும்
குலவேடன் கொடுங்காலால் உதைத்த புண்ணும்
பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்த புண்ணும்
பாரென்றே காட்டி நின்றான் பரமன் தானே

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகத்தில் “புண்சுமந்த பாடல்” என்று தொடங்கி “புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்” என்று முடியும் பாடலை மனத்துட் கொண்டு மேற்கண்ட பாடலைப் புலவர் பாடினார் என்பது தெளிவாகிறதல்லவா?

—மயிலைவாணன்




*திருவளர் செல்வனுக்கு,*

*நல்வாழ்த்துக்கள் !*

சென்ற கடிதத்தில் யோக நிலையின் எல்லையிலுள்ள சமாதியைப்பற்றி விளக்கினோம். இந்தச் சமாதி நிலையிலும் கூட மற்றொரு படி உண்டு. அந்நிலையில் 'நான்' என்ற உணர்வு இல்லாமல் போகிறது. அதுவே ஜீவன் முத்தநிலை. ஜீவன் முத்தர்களுக்கு ஆசையும் இல்லை. அதனால் துன்பமும் இல்லை. திருவளர் செல்வ சாங்கியம், 'கடவுள் உண்டு' என்பதை ஒப்புக்கொள்ளவில்லை. யோகம் கடவுளை ஒப்புக்கொள்கிறது. அதனால் சாங்கியம் 'நிரீஸ்வர சாங்கியம்' என்றும், யோகம் 'சேஸ்வர சாங்கியம்' என்றும் பெயர் பெற்றது. யோக நெறியினர் கடவுள் உண்டு என்ற கொள்கையை எடுத்து விளக்கும் முறை சிறப்பானது. அதாவது உலகில் காணப்படும் பொருள் ஒவ்வொன்றும் குறையுடையதே. ஒரு குறையைக் காணும்பொழுதே அதற்கு மாறான வளர்ச்சியான, குறையின்மையை-நிறையை அறியமுடியும். குறைகளை அறியும் வாயிலே நிறையை அடைதற்குரிய வழி. குறைகளுடைய பொருள்களைப் பார்க்கும் பொழுது நிறையுடையது ஒன்று இருக்க வேண்டுமென்று யோக நெறியினர் கூறுகின்றனர்.

யோக நெறியினர் காட்டும் கடவுள் இலக்கணங்கள் குறையுடையனவாக இருக்கின்றன. யோக நெறியினர் கொள்கைப்படி குறையிலா ஒன்றினை ஏன் குறைவாகக் காட்டுகின்றனர் என்பது புரியவில்லை. அஃதொரு விசித்திரமான முரண்பாடு. யோக நெறியினர் "இறைவன் என்றும் உள்ளவன்; எல்லாம் அறிபவன்" என்று கூறுகின்றனர். ஆனால், எல்லாவற்றையும் தன்னுள் அடக்கும் ஆற்றல் கடவுளுக்கு இருப்பதை அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு பொருள் உயர்ந்ததானால் அப்பொருள் எல்லாவற்றையும் தன்னுள் அடக்க வேண்டும். இதனை யோக நெறியினர், "இறைவன் தன்னுள் எல்லாவற்றையும் அடக்கிக் கொள்ள இயலாமல் பிரகிருதி தடை செய்கிறது. உயிர்கள் தடை செய்து எல்லை வகுக்கின்றன. இறைவனால் வீடுபேற்றைத் தர இயலாது. ஆகவே, இறைவன் படைப்பவனுமல்லன்; காப்பவனுமல்லன், உயிர்களின் செய்வினைகளுக்கு ஏற்ப இன்ப துன்பங்களை அளிப்பவனுமல்லன்; உயிர்களின் எல்லையும் அவனல்லன்" என்று கூறுகின்றனர். இவ்வளவும் இல்லாத ஒருவனை அல்லது ஒன்றைக் கடவுள் என்று எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? யோக நெறியினர் கொள்கைப்படி பார்த்

தால் இறைவன் ஓர் உயர்ந்த சிறப்பு நிலைப் புருடனேயாவான். அதாவது சாதாரணப் புருடன் அறியாமையிலிருந்து அறிவுக்கு வளர்கிறான். இறைவன் என்றும் அறியாமையில் இருந்ததில்லை. ஆனாலும், யோகத்தில் பக்திக்கு இடமுண்டு. இறைவனிடத்தில் பக்தி செலுத்த வேண்டும். அப்பொழுது இடர்கள் நீங்கும். எப்படியிருந்தாலும் யோகம் கடவுளை ஒப்புக்கொள்ளும் சமயமே யாம்.

திருவளர் செல்வ, சாங்கியமும் யோகமும் எல்லாவற்றாலும் ஒன்றேபோலத் தோன்றினாலும் சாங்கியம் கடவுளை ஒத்துக் கொள்ளவில்லை. யோகம், கடவுளை ஒத்துக்கொள்கிறது. சாங்கியத்தின் இலட்சியம் ஞானம். யோகத்தின் இலட்சியம் தியானம். சாங்கியம் ஞானம் என்று கூறினாலும் அது கூறும் ஞானம் சைவசித்தாந்தம் கூறும் ஞானத்தோடு மாறுபட்டது. அதுபற்றி, சைவ சித்தாந்தம் பற்றி எழுதும்போது எழுதுவோம். இன்று பொதுவாக நமது நாட்டில் யோகம் என்பது ஒரு சமய நெறியாக மேம்பட்டு விளக்கம் பெறவில்லை. அஃதொரு சாதன நெறியாக விளங்கி வருகிறது. சாதன நெறியாக விளங்கி வரும் யோக நெறியில் பிராணாயாமம் இந்து சமயத்தின் வேதாந்த–சித்தாந்த சமயங்களால் முழுமையாக ஏற்றுக் கொள்ளப் பெற்றிருக்கிறது. யோக நிலையில் நின்று வாழ்ந்தோர் வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணம் கூறுகிறது. சுந்தரர் நெறி யோக நெறி என்பது மரபு. திருவளர் செல்வ, அடுத்து வைசேடிகம் என்ற இந்திய சமயத்தைப் பற்றி எழுதுவோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

இன்றக்குடிஅடிகளார்

காலம் களவு போகலாமா?

ஒரு மனிதன் தனக்குரிய பொருள் கொள்ளையில் போகும்போது களவு போய்விட்டது என்று கூறுகின்றான். அதுபோலவே நம்மை அறியாமல் நமது செயலுக்குப் பயன்படாமல் கழிகின்ற காலமும் களவு போனதாகவே கருதப்படும். ''களவுபடாதோர் காலம்'' இது!

ஞானம் என்பது என்ன?

ஞானம் என்பது குறைவற்ற பேரறிவு. துன்பத்தினைத் தாராதது; இன்பத்தினை வழங்கும் நல்லறிவு.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

[தொகுப்பு : ஏ. ஜி. சுப்பிரமணியம்]

உ

சிவமயம்

# திருவடி ஞானம்

சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

முன்னைய கட்டுரைப் பொருள் விளக்கம் பெற்று உணர்வு சான்றவர்க்கு இக்கட்டுரையும் மிக்க தெளிவைப் பயக்கும். 'ஒன்று அவன் தாளே' எனத் திருமூலதேவ நாயனர் அருளியது, மேலும் தெளிய விரும்பிஞர்க்கு இதில் வெளிப்படும் உண்மையுணர்வு மிக விளக்கமாயிருக்கும்.

கர்த்தாவினுடைய சீபாத கமலம் ஆகிய திருவருண் ஞானம் (சிவஞான போதம் சிந்தனையுரை பக்கம்–104)

கர்த்தாவினுடைய பாதம் ஆகிய திருவருள் அத்துவிதமாய் இரண்டறக் கலந்து நின்று நடத்தும் (ஷை. 46)

கர்த்தாவே முதன்மையாக நீ உன்போதம் தோன்ருமல், அவருடைய பாத தாமரைக்குள் ஒடுங்கிக் கிடப்பையே ஆனல், உன்னுடைய பாசம் எல்லாம் நசித்துப் போம். (ஷை–104).

ஓங்குணர் வகத் தடங்கியுளத்
துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கியேகத்
தொன்மையிற்று களிலோரே.
(சிவப்பிரகாசம்–93)

ஓங்குணர்வி னுள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்.
(திருவருட் பயன்–91)

நீரின்ப வெள்ளத்து நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்
பரிமேற் கொண்ட பாண்டியனர்
ஓர் இன்ப வெள்ளத் துருக் கொண்டு
தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்
கழலே சென்று பேணுமினே

என்னுந் திருவாசகத்திலேயே,

பேரின்ப வெள்ளத்துள் என்றதும் ஓர் இன்ப வெள்ளத்துரு என்றதும் உள்ளத்துள் இன்பு ஒடுங்க என்றதும் தொடராலன்றிக் கருத்தால் ஒன்றே, அவ்வின்ப வெள்ளத்துட் பெய் கழல் என்றதும் ஓங்குணர்வு என்றதும் வேறல்ல. ஒன்றே. எதைப் பெய்வது? முத்தியுற்ற ஆன்மாவைப் பெய்வது கழல் (எழுவாய்). பெய்யும் இடம் வெள்ளம். இன்ப வெள்ளம். பேரின்ப வெள்ளம். பேரின்ப வெள்ளம் சிவாநந்தக் கடல். அக்கடலிற் பெய்யப் பெறுவது சுத்தான்ம சைதன்னியத்தை. அச் சுத்த சைதன்யமாகிய முத்தான்மாவைச் சிவாநந்தக் கடலுட் பெய்வது சிவ சைதன்னியமே. அதுவே கழல். இதனைத் திருவைந்தெழுத்துள் வைத்துணரலாம்.

கழல் பேரின்ப வெள்ளத்துள் பெய்யும்
முத்தான்மாவை
வாசியுள் அருளும் யவை
வகாரம் சிகாரத்துள் வைத் தருளும்
யகாரத்தை
அருள் சிவத்தை அருளி யவை
வாழ்விக்கும்
வாசியை அருளுமா (று)ய மற்று அது(வா)
ஈசனில் ஏகம் ஆகும். பற்ருவுற்று அங்கு
வா சி அருள் யவை வாழ்விக்கும்
கழல் பேரின்ப வெள்ளத்தை முத்
தான்மாவுக்கு அருளி வாழ்விக்கும்.

இங்கு முத்தியடைந்த ஆன்ம சைதன்னியத்தையே கொள்ளல்வேண்டும். அதைப் பேரின்ப வெள்ளத்துட் பெய்வது கழல். அக்கழல் இரண்டாயிருப்பது தகுமோ? மக்களுடம்பு முதலியவற்றின் அடி போல இருக்குமோ? இரண்டாயிருக்குமோ? 'ஒன்று அவன் தாளே' என்ற திருமூல தேவநாயனர், இரண்டு அவன் இன்னருள் என்றது எவ்விரண்டனை? பரஞானம் அபரஞானம் என்னும் இரண்டனையே அன்றி வேறில்லை.

குருமணியின் ஒளிப்பிழம்பு
கொழுந்தோடிப் பல்கணியாய்
மருவு கதவு எனத் தோற்றும்
மணி வாயில் இருபுடையும்
பொருவில் பரம் அபரம் எனப்
புகல் ஞானம் இரண்டனையும்
அருள் நிலையும் திருவெழுத்தால்
அருச்சனை செய் தமைத்திட்டான்.
(தணிகைப் புராணம்–குமாரேசப்படலம்-31)

குமாரேசர் சிவபூசை செய்யும் நிலையில் சிவபூஜா மண்டபத்தின் மணிவாயில் இருபாலும் துவார பூஜை செய்யும் முறையில் பரஞானத்தையும் அபரஞானத்தையும் திருவைந்தெழுத்துள் அருள் எழுத்தால் (வகாரத்தால்) அருச்சனை செய்தார். அருள் நிலையும் திருவெழுத்து-உச்சரிப்பு யாதும் இல்லாதபடி உணர்வால் உணரப்படுவது. மாயா காரியத்துள் ஒன்றாய வர்ணத்துள் ஒன்றாயின் (எழுத்தாயின்) பாச சம்பந்தம் அங்கும் உண்டாயிற்று. கேவலம் சகலம் இரண்டும் கடந்த சுத்தத்தில் வர்ணத் துவாவும் பிற அத்துவாக்களும் உள்ளன அல்ல.

'ஆசில் எழுத்தஞ்சு' 'இராப் பகலற்றின் பத்தே நன்னரி' 'யாவைக்கும் அப்பாலாம் மோனந்த மாமுத்தி' நாதாந்தத் தஞ்செழுத்து என்று மனவாசகங் கடந்த நாயனாரும, 'அந்தம் ஆதிகள் இலாத அஞ்செழுத்தருள், திருவெழுத்து, திருவெழுத்தைந்து, அஞ்செழுத்தருள் நிலை, ஆசிலுருவம் என்று உமாபதி தேவ நாயனாரும் அருளியதால் (ஆசு–ஆணவம், மலக் குற்றம்)

'வசி' என்னும் ஐந்தெழுத்தருளைப் பாசாக்ஷரமாகக் கருதி நரகில் விழுதலாகாது.

'நெஞ்சால் நினையும் நெறியுண்டேல் நீள்
பிறப்பாம்
பஞ்சாக் கரத்தினருள் பாராமல் எஞ்சா
எழுத்தென்று கொள்ளில் எரிவாய் நரகில்
விழுத்தும். சிவன் ஆணை மெய்'
(சிவாநந்த மாலை-328)

வினா

நாவார அஞ்செழுத்தை ஓதின் நரகென்
றுரைத்தீர்
ஓவாத முத்தர் எலாம் ஓதுவதென்?

விடை

பாவாய் கேள்

சொல் இறந்த அஞ்செழுத்தைச்
சொல்லிறந்த உண்மையிலே
சொல் இறந்து நின்றுஓது வார். (ஸ்ரீ-329)

இவ்வுண்மையைப் பேசாவெழுத்து, கூரு மொழி, பேசாமொழி, மொழியா மொழி என வரும் சாத்திரத் தொடரால் நன்குணரலாம்.

மாயா சம்பந்தம் பூசையிலும் கூடாது மெய்யுணர்ந்தோர்க்கு.

சச்சிதா நந்தத் தனி முதலாம் தன் முதல்
பால்
அர்ச்சியா அர்ச்சனையை ஆதிகுரு
உற்பவித்தே
கொட்டிறு பொய்ப் போதம் அறக் கூறிய
பின் வேறு தரும்
உட்புறம்பாம் அர்ச்சனை அற்றாேம். (377)

அர்ச்சியா அர்ச்சனைக்குரிய ஞானவான்கள், அகவழிபாடு புறவழிபாடு இரண்டும் அற்றவர். இதனைச் சிவஞான சித்தியாருள்ளும், "எங்கும் ஆண்டவனைக் கண்டக்கால் அகம்புறம் என்னாதே திறம்பாதே பணி செய்து நிற்கை அன்றோ சீரடியார் தம்முடைய செய்தி, சிவஞானச் செயலுடையோர், சிவஞானச் செய்தியுடையோர்" என்று மூவேறிடத்தில் அருளியதாலும் அறியலாம். அந்நிலையோர் எக்கையாலும் பூசை செய்யார்.

மாறு வலக்கரத்தால் பூசிக்கின் மாநரகம்
ஏறு நரகம் இடக் கரத்தால் கூறுத
அஞ்செழுத்தை நாவால் அறை குவையே
ஆமாகில்
விஞ்சு பிறப் பேழாய் விடும்.
(சிவாநந்த மாலை-378)

'ஞான பூசை' எனத் தனிமுறை ஞானத் தேவர்க்கு அமைந்திருக்கும் உண்மையும் இதனைப் புலப்படுத்துகின்றது. உமாபதி சிவம் அருளிய ஞான பூஜா விதியையும் ஞான பூஜா காரணத்தையும் அநுட்டானம் பண்ணி அநுபவம் பெருகியவரே இதை நன்குணர்வர்.

மெய்யுணர்வினோர் உலகில் உடலொடு கூடியிருப்பார்போலத் தோன்றினும் உண்டும் உறங்கியும் உறையும் ஏனைய அஞ்ஞானத்தார் போலத் தோன்றினும் உண்மைநிலையிற்

சிறிதும் இழியாது ஓங்குணர்வினுள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத் தூங்கியே வாழ்வர்.

திருவருட் பயனில், அணைந்தோர் தன்மையில் முதலாவது இந் நிலையே கூறப்பட்டது.

சிவப்பிரகாசத்தில், "உள்ளச் செயல் அறுத்திட உதிக்கும் தற்பரம்" என்றுளது. அது சாக்கிராதீதம் உணர்த்தும் திருவிருத்தத்தில் உளது. சாக்கிராதீதம் சீவன் முத்தர்க்கு இயலும் ஒன்று. அஃது அவர்க்கு இரண்டாவது நிலை. சிவஞான சித்தியாரில் (286)

'இந்நிலைதான் இல்லையேல், எல்லாம் ஈசன்
இடத்தினினும் ஈசன் எல்லா இடத்தினி
னும் நின்ற
அந்நிலையை அறிந்து'

என்று இருநிலை உணர்த்தப்பட்டன. அவ்விரண்டனுள் இந்நிலை எனப்பட்டது முதலாவது. அந்நிலை எனப்பட்டது இரண்டாவது. 280, 281, 282, 283 எண்ணுள்ள திருவிருத்தங்களினும் சகஜநிட்டை விளக்கமும் பின் இரண்டனுள் அந்நிட்டை மேவினுர் பெற்ற வீடும் கூறப்பட்டன. படவே இந்நிலை என அண்மைச் சுட்டால் அச் சகஜ நிட்டையையும் அந்நிலை எனச் சேய்மைச் சுட்டால் சிவனது சருவ வியாபகத்தையும் சருவமும் ஈசனிடத்தில் அவகாசத்தையும் உணர்த்தி, அதன் பின், சாக்கிராதீதம் உணர்த்தியதை அறிக. அதன் பின் அச் சாக்கிராதீத நிலையினுர் பெருமை முதலியவற்றை ஒரு திருவிருத்தம் கூறிற்று.

சகச நிட்டையில், அறியாமை (கேவலாவத்தை) அறிவு சகலாவத்தை) அகற்றி அறிவினுள்ளே) அறிவுதனை அருளினுல் அறியாதே அறிந்து, குறியாதே குறித்து, அந்தக் கரணங்களோடும் கூடாதே. வாடாதே குழைந்திருத்தல் இயல்பு. அவ்வியல்பே செயற்கையாய்த் தோன்றுங்கால் சாக்கிராதீதம் எனச் சிறப்பின் எடுத்துக்கொள்ளலாகும். இயல்பாய இந்நிலை இல்லையேல் எல்லாம்.......நின்ற அந்நிலையை யறிந்து, அந்தக் கரணங்களை அடக்கி. அறிவதொரு குறி குருவினுலறிந்து, மன்னு சிவன்றனை அடைந்து நின்று, அவன்றனுலே மருவு பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரமதனில் துரியாதீதம் தோன்ற முயல்— என்றதால் முயற்சி குறிக்கப்பட்டது. படவே அம்முயற்சிசகஜம் ஆகாது எனல் வெளிப்படை.

ஆரியனும் ஆசான் வந்து அருளாக தோன்ற .........எல்லாம் முன் நிகழ்ந்து தோன்றும், மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநிபாதம் மேவுதலும், ஞானம் விளைந்து, ஓர் குருவினருளால் புக்கு அநுட்டித்தே, நிட்டை புரிந்துளோர்கள் ..........சீவன் முத்தர் ஆகி; பிரியாப் பிரியம் இன்றி, சமபுத்தி பண்ணி, சங்கரனோடு ஒக்க உறைந்து சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர். இங்குத் தன்வினையே யன்றிப் பிறவினை ஒன்று இல்லை'. ஒன்று அவன் தாளே' என்றதன் உண்மையும் இங்குப் புலப்படும்.

அறியாமை (கேவலம்) அறிவு (சகலம்) அகற்றி என்றது பிறவினை. அறியாதே அறிதல், குறியாதே குறித்தல், கூடாமை, வாடாமை, குழைதல், குழைந்திருத்தல் எல்லாம் தன்வினை. சிவன் பிறிந்து தோன்றல் எல்லாம் தானுய்த் தோன்றல். இவையெல்லாம் அல்லவாதல் என்றும் நிராதாரனுகித் தோன்றிடுதல் எல்லாம் தன்வினை. இகபோகத்தே முத்தி பெறும்; கலந்து அரன்போல் நிற்பன். இங்கெல்லாம் தன் வினையாலே இயல்பு நிலை (ஸஹஜ நிட்டை)யே கூறினுர். சாக்கிராதீத நிட்டையில் 'முயல்' உலாவுகின்றது. இம் முயல் கானிலும் வானிலும் உள்ளதின் வேருகும் உள்ளச் செயலறுத்திடல் முயற்சி செயற்கை. சிற்பரம் தோன்றி நிற்றலும் தற்பரம் உதித்தலும் இயல்பு.

கருவிகளும் (ஒருவி) (பொற்புறு கருவியாவும் புணராமே) அறியாமை கதுவவரு கேவலமும் ஒருவி (அறிவிலாமைச் சொற்பெறும் அதீதம் வந்து தோன்ருமே) எழு பரஞானத்து (தோன்றி நின்ற சிற்பரமதனுல்) உள்ளச் செயலுறுத்திட (உளச் செயலைத் தப)த் தோற்றும் பெருகுபரமாநந்தப் பெரு நிலைமைப் பொருளேயாம் முருகன் (உதிக்கும் தற்பரம்) எனத் தணிகைப் புராணம் சிவப்பிரகாசத்தைப் போன்று, செயற்கையில் ஆகி நிற்றலுடைய சாக்கிராதீதத்தை உணர்த்திய வாறு நோக்குக. சகலம் நீங்கி தன் பின் கேவலம் நீங்க வேண்டும் மக்களுக்கு. அதனுல் சகலாவத்தை நீக்கம் முற்கூறப்பட்டது. சகச நிட்டை விளக்கம் பின்வரும். (வளரும்)

# ஐயந்தெளிதல்

லா. மு. இராகவன், வள்ளலார் நகர்.

"சோவியத் நாட்டின் வறுமையற்ற சமநிலைச் சமுதாய அமைப்பை நேரில் கண்ட தவத்திரு அடிகளார் அவர்கள் என்ன எண்ணியிருப்பார்கள்?

வறுமையற்ற சமுதாயம் என்பது கடவுட் சமுதாயமே. தேவர்களைக் கடவுட் சமுதாயம் எனக் கூறும் கருத்தை ஏற்றுக் கொள்பவர்களுக்கு ஒரு விளக்கம். தேவர்களுக்குப் பசியில்லை; வறுமையில்லை; தேவையில்லை. எனவே கடவுட் சமுதாயம் என்பது வறுமையற்ற சமுதாயமே.

தேவைக்குமேல் சேர்த்து வைத்துப் பிறருடைய துய்ப்புக்கு உரியவைகளைத் தனியுடைமையாக்குபவன் விலங்கை விடத் தாழ்ந்தவன்.

தன்னைப் பொறுத்த வரையில் வறுமையின்றி வாழ எண்ணி, அதற்கான துய்ப்புப் பொருள்களை மட்டுமே சேகரித்து வைப்பவன் சாதாரண மனிதன்.

தன்னையும் தன் அயலாரையும் ஒன்றென எண்ணி, துய்ப்பு முறையில் சமநிலைச் சமுதாய அமைப்பை உருவாக்க எண்ணுபவன் கடவுள் தன்மையைப் பெற்ற மனிதன். எனவே, சமநிலைச் சமுதாயம், வறுமையற்ற சமுதாயம் அமையத் தொண்டாற்றுபவன் கடவுளின் அடியவன் அல்லது தொண்டன். சமநிலைச் சமுதாய அமைப்புடைய நாட்டைக் கடவுள் நாடு (Kingdom of God) என்று கூறுவது மேலைநாட்டு வழக்கு.

வறுமையும், பசியும், சுரண்டலும், வாழ்விழந்த பழிநிலையும் உள்ள நாடு கடவுள் அமைத்த சிறைச்சாலை. சிறைச்சாலையை அறச்சாலையாக ஆக்கி, வறுமையை அகற்றி, சமநிலைச் சமுதாய அமைப்பை உருவாக்கி, அந்நிலையில் காணப்பெறும் சோவியத் நாட்டை அடிகள் காணும்போது "மலிந்தவர் வேடமும் அரன் எனத்தொழும்" என்ற சிவஞான போதத்துக்கிணங்க, அத்தகைய சமநிலைச் சமுதாயம் உருவாக்கியவர்களைச் சிவகணம், சிவனடியார், சிவத்தொண்டர் என எண்ணிக் கண்டு மகிழ்ந்து போற்றியிருப்பர்.

வறுமையற்ற சமநிலைச் சமுதாய அமைப்பைச் சோவியத் யூனியன் மக்கள் உருவாக்கியிருக்கலாம். கடவுள் நாட்டை வடித்தெடுத்துக் கொடுக்கும் சமுதாயச் சிற்பியாக விளங்கும் அடிகளாரின் முடிந்த குறிக்கோள், வறுமையற்ற சமநிலைச் சமுதாய அமைப்பை உருவாக்குவது மட்டுமன்று; பொருமையற்ற சமநிலைச் சமுதாய அமைப்பை உருவாக்குவது என்பதே அடிகளாரின் முடிந்தநிலைத் தொண்டு. அடிகளாரின் தொண்டின் குறிக்கோளை எண்ணும்போது சோவியத் யூனியன் மக்கள் அடிகளாரின் தொண்டுப் பாதையில் பாதிவழி வந்து நிற்கின்றனர். சிற்சில சமயங்களில் ஐயகோ! இவர்கள் தொண்டு பாதியில் நின்று விட்டதே என்று ஏங்கி, இரங்கி, உளம் நொந்திருப்பார்கள்.

டாக்டர் வை. இரத்தினசபாபதி,
எம்.ஏ.பி.ஓ.எல்.பிஎச்.டி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)

பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

### மங்கையர்க்கரசியார்

பூச லயிற்றென்ன ஞர்க்கன
லாகப் பொருமையினல்
வாச மலர்க்குழற் பாண்டி
மாதேவியா மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா
கரர்க்கறி வித்தவரா
ஞசம் விளைத்தா எருகந்
தருக்குத் தென் ஞட்டகத்தே. 79

(இ-ள்): பகைவர்மாட்டுப் போர் செய்தற்குரிய அயிற்படையை யுடைய நின்றசீர் நெடுமாற நாயஞர்க்குத் தீச்சுரம் உண்டாக அதற்குத் தான் சகிக்காமையால்; வாசனை கமழும் மலர்களை முடித்த அளகத்தையுடைய பாண்டிமாதேவி யென்னும் பிராட்டியார்; உலகத்திலுள்ளார் அறியும்படி, ஆளுடைய பிள்ளையாருக்கு அந்நோயைத் தெரிவித்து; அப்பிள்ளையாரால் பாண்டி நாட்டில் அருகருக்குக் கேட்டை விளைத்தவள் என்று அறியுங்கள். எ-று. ஏ-அசை.

### நேச நாயஞர்

நாட்டமிட் டன்றரி வந்திப்ப
வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற்ற வனென்பர்
சைவத் தவரையிற்
கூட்டு மகப்படக் கோவண
நெய்து கொடுத்து நன்மை
யிட்டுமக் காம்பீலிச் சாலிய
நேசனை யிம்மையிலே. 80

(இ-ள்): சிவனடியார்களது திருவரையிற் றரிக்குங் கீளோடு கூட -கோவணத்தையும் நெய்து கொடுத்து: சிவபுண்ணியத்தைச் சம்பாதித்த அந்தக் காம்பீலி என்னும் ஊரில் அவதரித்த சாலிய குல முதல்வராகிய நேசநாயஞரை இவ்வுலகத்தில்; அந்நாளில் கண்ணை யிடந்தருச்சித்துத்திருமால் வழிபாடு செய்ய; அசுரர்களை வெல்லத்தக்க சக்கரப் படையைக் கொடுத்தருளிய சிவபிரானது; திருவடிகளைத் தன் இதயத்துத் தியானிக்கப் பெற்றவரென்று அறிஞர்கள் கூறுவர். எ-று. ஏ-அசை.

### கோச் செங்கட் சோழ நாயஞர்

மைவைத்த கண்ட னெறியன்றி
மற்ரோர் நெறி கருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு
சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து
தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்றிருக்கோச்செங்
கணுனெனுஞ் செம்பியனே. 81

(இ-ள்): கருமை தங்கிய திருமிடற்றை யுடைய சிவபிரான் அருளிய சைவ நெறியே யன்றி; வேறொரு சமய நெறியை மனதில் நினையாத; தெய்வீகமுள்ள சோழர் குடியில் அவதரித்தவரும்; முற்பிறப்பில் சிலந்திப் பூச்சியாய்த் திருவானைக் காவலிற் பந்தர் செய்து; பின் சைவராக அவதரித்து; நிலவுலகின்கண் மிக்க சிவாலயங்களில் திருப்பணி செய்வித்தவரும் யாரெனில்; செல்வம் மிக்க கோச்செங்கட் சோழ நாயஞர். எ-று. ஏ-அசை.

செம்பொ னணிந்து சிற்றம்
பலத்தைச் சிவலோக மெய்தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன்
குலமுத லென்பர் நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச்
சூழ மறைவளர்த்தா
னிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க
ணுனெனு நித்தனையே. 82

(இ-ள்): நல்ல வாசம் வீசும் மலர்களையுடைய சோலை சூழ்ந்த தில்லையின்கண் நடேசப் பிரானைச் சூழும்படி; தில்லை மூவாயிரவர்க்குத் திருமாளிகைகள் செய்வித்தவராகிய; நறுவிய வேப்பம் பூமாலையை யணிந்த; கோச்செங்கட் சோழ நாயஞரென்னும் முத்திநெறியடைந்தவரை; சிதம்பரசபையைப் பொன்னல் அலங்கரித்து; சிவலோகத்தையடைந்து சிவபிரான் திருவடி நிழலின்கட் சென்ற இரணியவன்மச் சோழனது; குலத்தில் அவதரித்த முதல்வரென்று அறிஞர்கள் கூறுவர். எ-று. ஏ-அசை.

பாண்டி தேசத்திற்கும் அரசராயிருந்தமை தோன்ற நிம்ப நறுந்தொங்கற் கோச்செங்கணுன் என்ருர்.

திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுர்

தனையொப் பருமெருக் கத்தம்
 புலியூர்த் தரும்புகழோ
னினையொப் பருநதிரு நீலகண்
 டப்பெரும் பாணனை நீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர்
 கோன்செந் தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ
 னென்பரிப் பூதலத்தே. 83

(இ-ள்): தனக்கொப்பில்லாத திருவெருக்கத் தம்புலியூரில் அவதரித்த பெரும்புகழை யுடையோராகிய; நினைவுக் கடங்காத பத்தி வலியினையுடைய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுரை நீண்ட கிளைகள் ஒத்து மலர்கின்ற சோலையையுடைய சீகாழியில் அவதரித்த ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகங்கள் பாடுந்தோறும்; பண்ணமைய யாழில் வாசிக்க இந் நிலவுலகத்தில் சிவபிரான் திருவருளைப் பெற்றவரென்று அறிஞர்கள் கூறுவர். எ-று. ஏ-அசை.

சடைய நாயனுர்

தலம் விளங் குந்திரு நாவலூர்
 தன்னிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை
 யுரைப்பர் குவலயத்தி
னலம்விளங் கும்படி நாம்விளங்
 கும்படி நற்றவத்தின்
பலம்விளங் கும்படி யாரு
 ரனைமுன் பயந்தமையே. 84

(இ-ள்): நிலவுலகத்தில் விளங்கிய திருநாவலூரில் அவதரித்த, குலத்தாற் சிறந்த சடையனுரென்னும் புகழுடையவரை; உலகத்தில் தவநெறிகள் விளங்கும்பொருட்டும்; அதனுல் நாமெல்லாம் நன்னெறியடையும்பொருட்டும்; நல்ல தவத்தாலாய பயன் விளங்கும்பொருட்டும்; நம்பியாரூரரை முன்னுளிற் பெற்றகாரணத்தால் நிலவுலகத்தில் அறிஞர்கள் புகழ்ந்து கூறுவார்கள். எ-று ஏ-அசை.

இசை ஞானியார்

பயந்தாள் கறுவுடைச் செங்கண் வெள்ளைப்
 பொள்ள லீள்பணைக் கைக்
கயந்தா னுகைத்த நற்காளையை
 யென்றுங் கபாலங் கைக் கொண்
டயந்தான் புகுமர ஞரூர்ப்
 புனிதவ ரன்திருத்தா
ளயந்தா டனதுள்ளத் தென்று
 முரைப்பது ஞானியையே. 85

(இ-ள்): கறுவுதலையுடைய சிவந்த கண்களையும் வெள்ளை நிறத்தையும்; உட்டுளையுள்ள பனை போலும் நீண்ட துதிக்கையினையும் உடைய யானையைத் திருக்கயிலைக்கு நடாத்திய நல்ல நம்பியாரூரரைப் பெற்றனளென்றும் கபாலத்தைத் திருக்கரத்திற்றுங்கிக் கொண்டு ஐயத்தைத் தானேற்றுண்ணும் முதல்வராகிய; திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளைத் தனது இதயத்து எந்நாளும் தியானிக்கின்றவளென்றும் இசை ஞானியாரை அறிஞர்கள் கூறுவர். எ-று. தான், ஏ-அசை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

ஞானவ் வாரு ரரசரை *யல்லது நாமறியோ
மானவ வாக்கை யொடும்புக் கவரை
 வளரொளிப்பூண்
வானவ ராலு மறிதற்† கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத்
 தோர்தங்கள் கூட்டத்திலே 86

(இ-ள்): பரம்பிய ஒளியையுடைய ஆபரணங்களை யணிந்த தேவர்களாலும் அறிதற் கருமையான; வடகயிலைக்கணுள்ள சிவபிரானது கோயிலில் வாழும்; பெரிய தவத்தையுடைய அடியார் திருக்கூட்டத்தில் சிவஞான மிக்க நம்பியாரூரரை யல்லாது; மனுடவுடம்புடன் போனவரை நாமறியோம். எ-று. ஏ-அசை.

திருத்தொண்டத் தொகையிலுள்ள கூட்ட
வடியார்கள்-தனியடியார்கள்

கூட்டமொன் பானே டறுபத்து
 மூன்று தனிப்பெயரா
யீட்டும் பெருந்தவத் தோரெழு
 பத்திரண் டாம்வினையை
வாட்டும் தவத்திருத் தொண்டத்
 தொகைபதி னென்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ
 ராளி பணித்தனனே. 87

திருத்தொண்டத் தொகைப் பதிகக்
கவிகளின் முதனினைப்பு

பணித்தநற் றெண்டத் தொகைமுதற்
 றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற
 வம்பரு வார்கொண்டதோ
ரிணைத்திகழ் பொய்யடி மைக்கறைக்
 கண்டன் கடல்சூழ்ந்த பின்
மணித்திகழ் சொற்பத்தர்
 மன்னிய சீர்மறை நாவனெடே. 88

பலனருள் கவி

ஓடிடும் பஞ்சேந் திரியமொடுக்கி யென் னுள்வினைகள்
வாடிடும் வண்ண நின் றெத்தவஞ் செய்தனன்
 வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே 89

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார் நம்பி அருளிச்செய்த கலித்துறைத்
திருவந்தாதி முற்றிற்று

ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் உரை முற்றிற்று

* ஞானவா ரூரரைச் சேரரை யல்லது—பாடபேதம்
† மருவத்—பாடபேதம்

௨

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 11 (தொடர்ச்சி)

நந்தி : பொறுத்திருந்தேன் பொறுத்திருந்தேன். அதனலே சுகம் கிடைச்சுது. இன்னும் பொறுத்திருந்தால் இன்னும் சுகம் கிடைக்கும். எனக்குப் பொறுமையைக் காட்டி வழிவகுத்த நீங்கள் எனக்குத் தெய்வம்போல என்னைக்கும் மறக்கமாட்டேன்.

சிவ : இரு இரு...உனக்கு நான் தெய்வம் போலத் தோணலாம். ஆனல் நம் இரண்டு பேருக்கும் தெய்வம் போல இருந்தவர் அந்தச் செல்வர் பரமதத்தனர்தாம். அவரைத்தான் நாம் வணங்கணும்.

நந்தி : ஆமாண்ணே, ஆமாண்ணே. அவர் பெயரைச் சொன்னதும் அவரைப் பற்றி விசாரிக்கணும் என்று தோனுது. ஆமா...பரமதத்தனர் வாணிகத்திற்காகக் கப்பலேறிக் கடல் கடந்து போனரில்லே?

சிவ : ஆமாம்

நந்தி : போய்க் கிட்டத்தட்ட ஏழெட்டு ஆண்டாவது இருக்குமே. அவரோடே போன மற்ற ஊர்க்காரெங்களெல்லாம் திரும்பி வந்துட்டாங்களாம்.

சிவ : அதுதான் தெரியலே நந்தி. அவர் நிறைய பொருள் திரட்டியிருப்பார். அதிலே ஒன்றும் சந்தேகமில்லே. ஆனல் ஏனே திரும்பி வரலே.

நந்தி : பாவம் அந்தப் புனிதவதியம்மையார் கணவரையே நினைந்து நினைந்து உருகிப் போயிருப்பாங்களே.

சிவ : என்ன பண்றது? கணவரை நினைக்கிறது; சிவனடியார்களை உண்பிக்கிறது; சிவத் தொண்டு செய்வது; இப்படியேதான் அவர்கள் காலம் போகிறது. அவர்களைப் பார்த்தாலே நமக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது.

நந்தி : ஏண்ணே ! அடிக்கடி அங்கே போய் வருகிறீங்களா ?

சிவ : ஆமாம் நந்தி .. அவர்கள் இல்லத்து உப்பைத் தின்று வளர்ந்தவன் நான். போகாமல் இருப்பேனு. இப்பக்கூட அங்கேதான் போய்க்கொண்டிருக்கிறேன்.

நந்தி : அப்படியா...நல்லது. நானும் வருகிறேன். அந்த அம்மா...அவர்கள் அப்பா தனதத்தனர் அவர்கள் அம்மா எல்லாரையும் பார்க்கணும் போல இருக்குது

சிவ : சரி வா போவோம்.

## காட்சி 12

இடம் : தனதத்தன் இல்லம்

நேரம் : பகல் நேரம்

உறுப்பினர் : தனதத்தன், சிவகாமி, பொன்னம்பலம்,
புனிதவதி, சிவப்பழம், மருதவாணர்.

தன : சாமி! வர வேண்டும் வர வேண்டும். இப்படி அமருங்கள். சிவகாமி! சிவகாமி! புனிதவதி! இங்கே வாருங்கள். சாமி வந்திருக்கு வந்து வணங்குங்க.

(வந்து வணங்குகிருர்கள்)

| | | |
|---|---|---|
| பொன் | : | உங்களுக்கு எல்லா நலமும் உண்டாகுக. (திருநீறளிக்கிறர்) அம்மா புனிதவதி! உன் சிவத்தொண்டு குறைவற நடக்கிறதல்லவா? |
| புனித | : | ஆம் சாமி! எக்குறையும் இன்றி நடைபெறுகிறது. என் தந்தையின் செல்வமும் என் கணவர் விட்டுச் சென்ற செல்வமும் சிவனடியார்க்கே யான் அளித்து வருகின்றேன். ஐயன் அருளால் சிவனடியார்களை நாளும் உண்பித்து வருகிறேம். |
| பொன் | : | அப்படியே தொடர்ந்து நடக்கட்டும். ஆ... தனதத்தன், சிவகாமி! நீங்கள் உங்கள் மகள் நிலையைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் இல்லையா? |
| தன | : | ஆமாம் சாமி! எங்களுக்கு அவளைப் பற்றிய கவலையே. |
| சிவ | : | அவளுடைய வாழ்வு தானே எங்களுடைய வாழ்வு சாமி! |
| பொன் | : | ஆமாம் உங்களுக்கு அவளைப் பற்றிய கவலை தான். ஆனல் புனிதவதிக்கோ எதைப் பற்றியும் கவலை இருப்பதாகத் தெரியவில்லையே. இல்லையம்மா புனிதவதி! |
| புனித | : | சாமி, அம்மையப்பன் அருளை நாடுதலே குறிக்கோள். அம்மையப்பனுய் உலகிற்கு ஒரு மாமணியாய் விளங்கும் இறைவர் சதிபதியாய் நின்று உலகை உய்விக்கின்றனர். அவர்தம் அருட் பெருக்கால் வாழும் நாங்களும் சதிபதியாய் இணைந்து வாழ்தல் வேண்டாவோ? அதனுல் திரைகடல் ஓடித் திரவியம் திரட்டச் சென்ற என் கணவர் வருகையை எண்ணியே என் உள்ளம் ஏங்குகிறது. அவர்க்காகவே யான் வாழ்கிறேன். நாளும் அவர் வருகைச் செய்தி கேளாதோ என் செவி என எதிர் நோக்குகின்றது. அவர் வருதல் வேண்டும் என்றே நாளும் என் பூசையின் போது அம்மையப்பனைவேண்டிக் கொண்டே இருக்கின்றேன். |
| பொன் | : | இல்லறத்தினை நல்லறமாகக் கொண்டு கணவன் வழி கடவுளின் அருளைப் பெற விரும்பும் உன் எண்ணம் நல்லதே. ஆயினும் உன் கவலையை வெளிக்காட்டாது கவலையற்றிருப்பது போலவே நடந்து கொள்கிருய். |
| புனித | : | ஆம் சாமி! எனக்காக வருந்தும் என் தாய் தந்தை யான் கவலைப்படுகிறேன் என்பதறிந்தால் மேலும் வருந்துவர்கள் அல்லவோ? ஆகவே என் கவலையை எல்லாம் ஆண்டவனிடமே காட்டுகிறேன். |
| பொன் | : | பார்த்தீர்களா தனதத்தன்...சிவகாமி! உங்கள் மகளின் திறத்தை. அவள் எண்ணம் போலவே அருள் பெற்று உய்வாள். ஆனல்...அந்தப் பரமதத்தன் மட்டும் இப்படி இன்னும் வாராதிருக்கக் கூடாது |
| தன | : | அவரோடு கப்பலேறிச் சென்றவரெல்லாரும் திரும்பி வந்து விட்டார்கள். |
| சிவ | : | அவர் போய் எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டனவே சாமி! |
| தன | : | அவர் இவ்வாறு இருப்பது எதனுலோ? |
| மருத | : | (வெளியிலிருந்து) அரகர சம்போ மகாதேவா! அம்மா தாயே! |
| புனித | : | சிவனடியார் போலிருக்கிறது. பார்த்து வருகிறேன்...வாருங்கள் சாமி! |
| தன | : | சாமி! வரவேண்டும் வரவேண்டும். |
| மருத | : | (பொன்னம்பலரை வணங்கி) பொன்னம்பல சாமியா? வணங்குகிறேன் |
| பொன் | : | சாமி மருதவாணரா, வாரும். |
| மருத | : | அடியேன் தங்கள் முன்னிலையில் இத் தனதத்தனர்க்கு ஒரு செய்தி சொல்லிப் போக வந்தேன். அருளல் வேண்டும். |
| பொன் | : | மருதவாணரே! சிவனடியாரகிய நீர் நல்ல செய்திதானே கொண்டு வந்திருப்பீர். சொல்லியருளும். |
| மருத | : | தனதத்தரே! உங்கள் நிலையை நான் நன்கறிந்தவன். நான் சிவத்திருத் தலம் ஒவ்வொன்றிற்கும் போய் வருகிறேன். தற்போது பாண்டிய நாட்டுத் தலங்களுக்குப் போய் வந்தேன். அப்போது மதுரையில் உம் மருகர்-இப் புனிதவதியின் கணவர்-பரமதத்தரைக் கண்டேன்! |

(தொடரும்)

# எழுத்துப்பட்டிமன்றம்

## திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?

### "வழிபடும் உரிமை இல்லை"

சா. வேலுச்சாமி குருக்கள்

செப்டம்பர் இதழில் வெளியான "உரிமை இல்லை" என்று என் கருத்துரைக்கு ஆதரவு தந்த என் இனிய நண்பர்களுக்கு நன்றி. நமது கருத்துரைகளை மறுத்து "உண்டு" என்று வாதம் புரியும் நண்பர்கள் எடுத்துக்காட்டிய வள்ளுவர், நாயன்மார்கள், திருமூலர் முதலிய வர்களை வைத்தே மிகவும் தெளிவான சட்ட பூர்வ மான ஆதாரங்களைக் கொடுத்திருந்தும் அவை களைப் புறக்கணித்து விட்டு தாம் கொண்ட நோக்கம் எவ்வாறுது செயல்பட வேண்டு மென்று துடிக்கும் நண்பர் திரு. சிவ. அம்பல வாணன் அவர்களுக்கு, தாங்கள் சிவாகமம் என்ற பெயரால் ஏதோ மோசடி செய்வதாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். நான் தாங்கள் சுட்டிக் காட்டிய திருமூலர் முதலானோர்களை வைத்தே சிவாகமம் மோசடி அல்ல என்பதை எழுதி னேன். அதிலே பரார்த்த பூஜையைப் பற்றிச் சொல்லி இருந்தும் அது ஏன் அப்படி என்று கேட்டால் (தங்கள் செப்டம்பர் இதழில் எடுத்துக்காட்டிய மேற்கோள் போல்) விளக்கொளி இருளை அகற்றுகிறது என்றால் அது ஏன் எப்படி என்று கேட்பதைப் போன்றல்லவா இருக்கிறது? ஆகையால் நீங்கள் திருமூலர், நாயன்மார்கள் மொழிந் தவைகளையும், சிவாகமங்களையும் அவ்வளவு இலட்சியப் படுத்தியதாகத் தெரியவில்லை. அவைகளை மறைமுகமாக மறுக்கிறீர்கள். கேள்வி எழுப்புவது சுலபம். பதில் சொல்வ தென்பது கடினம். ஆகையால் இனி மேலாவது நண்பர் அவர்கள், திருமந்திரம், திருத்தொண் டர் புராணம் முதலியவைகளைத் திருப்பிப் பார்க்கட்டும்.

பிறப்பின் அடிப்படையில் தொழிலை மாற்றிக் கொள்கிற காலம் இது என்கிறீர்கள். அது இந்தக் காலமல்ல. மரபுக் கேற்ற தொழிலை வழங்கிய காலம் அந்தக் காலம். அதனால் தான் வேதியர்க்கு அவ்வர்ச்சகர் தொழி லமைத்த தென்பதை அறிக.

சட்டம் என்பது நம் இருவருக்குமே தெரியாது ஆனால் மாமன் பெண்ணை மணப்பதென்பது பண்டை மரபு. மரபின் அடிப்படை ஒழுக்கம். ஒழுக்கத்தின் அடிப்படையே அம்முறை. அவை சரியாகப் பொருந்தாவிடில் வேறு பெண்ணைத் தெரிந்தெடுக்கலாயென்பதை யுணர்க.

கண்ணப்பர் தகுதி பெற்ற பூசாரிகள், குருக்கள்கள் இல்லை என்பது உண்மை. ஆனால் அக்கண்ணப்பன் வழிபடு முன்பே சிவகோசரி யார் என்ற அந்தணர், பூசிக்கும் தன்மை வாய்ந்த வழிவழி அடிமை செய்யும் வேதியர் என்பதை மறக்கக் கூடாது. கண்ணப்பர் பூசித்த முன்னும், பின்னும் பூசித்தவர் அவர் தான். மேலும் நந்தனர், தான் பயந்து கொண்டு ஆலயத்துட் புகாமலிருந்தார் என்கிறீர்கள். அவருக்கு ஏன் பயம். அவருக் காக நந்தியை விலக்கி, சிவமே தரிசனம் கொடுத்தாரே. ஆகையால் அவரருள் பெற்ற நந்தனர், தான் கோவிலுக்குள் சென்றால் விரட்டி விடுவார்கள் என்ற பயம் அவருக்கு இருக்கத் தேவையில்லை. மேலும் சிவனருள் பெற்ற அவர் எதையுமே சாதிக்கலாமே. அல்லது இறைவனே கருவறைக்குள் அழைத் திருக்கலாமே. ஏன் தில்லையுட் சென்று தீக் குளித்து எம்மிடம் வா என்றார். திருவாளர்கள் இதை சிறிது சிந்திக்க வேண்டும். ஆக, நந்தனர் தம் வழிமுறைக் கேற்ப உள்ளே புகுதல் தகாது என்றுணர்ந்து தன் அடக்கத் துடன் ஒழுகினர். இதிலிருந்து ஆதி சைவ அந்தணர்கள் பிறப்பிலேயே சிவபெரு மானுக்கு வழி வழி அடிமை செய்ய தீட்சிக்கப் பட்டு பிறக்கிறார்கள் என்று காரணகமம் சொல்லுவதோடு, "மாதொரு பாகனர்க்கு வழி வழி அடிமை செய்யும் வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடையனர்க்கு" என்பதாலும் அவ்வாதி சைவ அந்தணர்களுக்கு இயற்கையி லேயே அத்தொழில் செய்ய உரியர் என்றும், அவர்கள் கண்ணப்பர் தகுதி பெறத் தேவை இல்லை. அவரல்லாதார் பூசிக்கத் தான் அவர் தகுதி தேவை என்பதை இதன் மூலம் கூறுகிறேன்.

"வழி வழி அடிமை செய்யும் வேதியர் குலம்"
"செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ் செய்"

என்பதனல் அந்தணர்க்கே அத்தொழில் என்பதையும், அக்காலத்தில் அவரல்லாதார் மாற்றுத் தொழில் புரிந்து வந்தனர் என்பதை யும், பல நூல்களிற் காண்க. அந்தணர் மட்டுமே பிற உயிர்களின்பொருட்டு செய்யப் படும் பரார்த்த பூசைக்குரியர். அது அவர் களுக்கு உரிமை, கடமை, பணி, தொழில்

என்பதையும் திருமூலர் வாக்கால் உணர்க. மேலும் அவர்கள் அத்தொழிலைக் குறைவறச் செய்ய பல நியமங்கள் விடப்பட்டன என்பதையும் அறிக.

டிக்கட் ஹவுஸ்புல் விஷயங்கள் கோவிலுக்கு ஆகாது என்று முதல்வரியில் குறிப்பிட்டு, இரண்டாம் வரியில் ஆலயநிதி நிலை பழுதிடையாமலிருக்க ஒருசிறு டிக்கட் மூலம் வசூலித்துக் கொள்ளலாமென்கிறீர்களே. இது துக்ளக் தர்பாரைப் போலல்லவா இருக்கிறது. ஆகையால் பிறப்பிலும் இறப்பிலும் அஃறிணை, உயிரிணை இரண்டும் ஒரே இடத்தில் கூடுகின்றன. ஆனால் வாழ்ந்திருக்கும் காலம் (பிறப்பிறப்புக்கு இடைப்பட்ட காலம்) எல்லாம் அதனதன் வழி தனித் தனியாகவே இயங்குகிறது. இறைவன் முன்னிலையில் எல்லா உயிர்களும் சமம். இருப்பினும் அவை வாழ்ந்திருக்கும் காலத்தில் பல பிரிவுகளும் பல உட்பிரிவுகளும் செறிந்திருக்கிற தென்பதையும் அதனதன் வழி முறை பிறழாது வாழ்ந்து, உரிமை என்ற பெயரால் செய்யத் தகுந்தவற்றைச் செய்து சிறப்படைதலே சாலச்சிறந்த நெறி என்பதையும் நன்கறிய வேண்டும். யாரும் எம்மதத்தையும், எம் மக்களையும் தாழ்ச்சியாகப் பேசாமல் அன்பு கொண்டொழுகுதலே நம் சைவ நெறி என்பது யாவரும் உணர்ந்ததே. தோலால் செய்த பெல்டை இடுப்பிலும், செருப்பைக் காலிலும் அணிகிறோம் என்பதை உணர வேண்டும். பிறப்பினும், அழிவினும் அது தோல் தான். ஆனால் வாழ்க்கைக்கு உபயோகிக்கும் போது அதன் தன்மை மாறுகிற தென்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அப்பரின் பெருமையை மிகவும் எடுத்துக் காட்டி இருக்கின்றீர்கள். ஆனால் நூலில் எழுதுவதுடன் சரி. அந் நாயன்மார்களின் வாக்கை நீங்கள் நம்பவில்லையே. நம்பியிருந்தால் "மாதொரு பாகனார்க்கு வழி வழி அடிமை செய்யும் வேதியர் குலத்துட் தோன்றி மேம்படு சடையனார்க்கு என்ற வாக்கின் உண்மையையுணர்ந்திருப்பீர்களே. வரிசையாகப் போனால் இடவசதி போதாதா? தூய்மை செய்வதென்பது கருவறை ஊழியர் அர்ச்சகர் பார்த்துக் கொள்ள வேண்டிய வேலை, எனவே இடவசதியும் தூய்மைக் குறைவும் ஒரு பிரச்சனையா? என்கிறார் திரு. சிவ அம்பலவாணன் அவர்கள். இதிலிருந்து எல்லோரும் கருவறைக்குள் போவதால் தூய்மைக் குறைவு ஏற்படுகிற தென்பதையும், அதைச் சுத்தப்படுத்த ஒரு அர்ச்சகனால்தான் முடியும் என்றும் தெரிகிறது. இதிலிருந்து கண்ணப்பர் தகுதி பெருமலே அவ்வர்ச்சகர் இறைவனுக்குப் படைக்கலாமென்றும், அவரல்லாதார் கண்ணப்பர் தகுதி நிச்சயம் பெற வேண்டுமென்றும், அவ்வாறு வழிபட்டாலும் அதைப் புனிதப்படுத்த சிவகோசரியார் போன்ற ஓர் அர்ச்சகர் தேவைப்படுகிற தென்பதையும் இவ்விடத்தில் உணர்ந்து கொண்ட என் நண்பரை மிகவும் பாராட்டுகிறேன்.

காலம் காலமாக அடிமை செய்யும் ஓர் உண்மை ஊழியன் (தனக்கு அவ்வடிமை புரிவதையே ஒரு தொழிலாகக் கொண்டவன்) தன் யஜமானனுக்கு அடிமை செய்யும் பாக்கியம் அவனை விட்டுப் போகிறதென்றால் உச்ச நீதி மன்றமென்ன குடியரசுத் தலைவரிடமே முறையிட அவ்வடிமை தயங்க மாட்டான்.

கருவறைக்குள் விடுவது (அல்லது) விடாமலிருப்பது மனிதாபிமானமல்ல. வாழ்க்கையில் துயருறும் தருணம், ஒருவருக்கொருவர் கை கொடுத்து உதவுதலே மனிதாபிமானமென்பதை அறிக.

குறிப்பிட்ட சில நேரத்தில் கருவறைக்குள் அனுமதித்தால் விலையுயர்ந்த நகைகளை அணிவிக்கத் தேவை இல்லை என்கிறார், "திரு. சிவ. அம்பலவாணன் அவர்கள். உன்னைச் சிங்காரித்து உன்னழகைக் கண்டு கொண்டால்'' என்றடிக்கேற்ப எல்லோரும் தரிசனம் செய்யும் போது மூர்த்தியை ஆபரணத்தோடு அலங்கரித்து அவனழகைக் கண்டு தரிசிக்காமல் விடுத்து எல்லோரும் போன பின்பு உள்ளே சுவாமியை அலங்கரித்து வைப்பதில் என்ன பயன்? மேலும் சீலமுடையவர்கள் கருவறைக்குள் அனுமதிக்கும்போது நகைகள் அணிவிக்க வேண்டாம் என்பதால் இதிலிருந்து சீலமுடையவர்கள் யார் யார் என்பதை மக்கள் உணர்வர். ஆகையால் நாம் பாதுகாப்பாக இருக்க வேண்டுமென்று கூறுவதால் சீலமுடையவர்கள் என்று வருபவர்களை எல்லாம் நம்ப முடியாது. அதிற் கபட நாடகிகளும் வருகிறார்கள் என்பதை அவரே ஒத்துக் கொண்டு தன் பக்கமே தாக்கிக் கொண்டார். மேலும் சீலமுடையவர்கள் என்று யார் யாரை எப்படிச் சோதிப்பது? "ஆலய வழிபாடுகளிற் சிறந்து விளங்குவது செந்தமிழ் நாடே". ஆகையால் மீண்டும் வட நாட்டைத் தென்னாடுடைய ஆலயப் பணிப் பள்ளிகளில் ஓர் ஆறு மாதமாவது படித்து ஒரு சிறிதாவது பயிற்சி பெறட்டும். முற்றும் கட்டுரையின் கட்டுரையிலே சிந்திப்பவைக்குச் சில:

1. நாயன்மார்கள், அவர்களது செந்தமிழ் பாசுரங்களை நம்பி உண்மையை ஏற்கிறீர்களா?

2. திருமூலர் திருமந்திரத்தில் உரைத்த சிவாகமத்தை உண்டென்று நம்புகிறீர்களா?

3. அதிற் கூறும் உண்மை நெறிகளை (கொள்கை வெறி கொள்ளாமல்) ஏற்கிறீர்களா?

இது பற்றி இன்னும் விவரிக்கலாம். ஆனால் என் இனிய நண்பர்களுக்கு இடம் விட்டு விலகுகிறேன்.

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 11

இடம் : தெரு

நேரம் : விடியற்காலை

உறுப்பினர் : ரெங்கன், நம்பி, ஆண்டாள், நப்பின்னை தோழியர் இருவர்

ரெங்கன் : [குளிரில் நடுங்கி] அடேயப்பா என்ன குளிர் !

நம்பி : மார்கழியிலே மண்ணெல்லாம் குளிரும் என்பார்கள்; சரியாகத்தான் இருக்கிறது.

ரெங்கன் : இந்த மார்கழித் திங்களில் கன்னிப்பெண்கள் பாவை நோன்பு நோற்கிறார்களாம், பாவை நோன்பு !

நம்பி : நல்ல பாவை நோன்பு ! [கோதை பாடும் ஓசை கேட்டு] அதோ கோதை அம்மா புறப்பட்டுட்டாங்க.

ரெங்கன் : ஊகும், இனிமே கோதை என்று சொல்லாதே, ஆண்டாள் என்று சொல்லு.

நம்பி : ஆமாமா,.........ஆண்டாள் அம்மா வர்றாங்க...வா, நாம் போய் தோட்டத்திற்குத் தண்ணீர் பாய்ச்சுவோம்.

ரெங்கன் : ஆமா......ஆமா.......

(ஆண்டாள் (பாடுகிறாள்

1. மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
   நீராடப் போதுவீர் ! போதுமினோ, நேரிழையீர் !
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
   கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
   கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே, நமக்கே பறைதருவான் ;
   பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

2. ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி
   நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
   ஓங்கு பெருஞ்செந் நெலூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
   தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்
   நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.

3. ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தருக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம்; பறை தருதியாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

4. மாலே! மணிவண்ணா! மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்து உன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே;
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே;
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலின் இலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.

## காட்சி 12

இடம் : பெரியாழ்வார் வீடு
நேரம் : மாலைப் போது
உறுப்பினர் : பெரியாழ்வார், ஆண்டாள்.

பெரியாழ்வார் : என்னம்மா ஆண்டாள்!

ஆண்டாள் : அப்பா!

பெரியாழ்வார் : பாவை நோன்பெல்லாம் முடிந்ததில்லையா? கன்னியரெல்லாம் நல்ல கணவன் மார் கிடைப்பாரென நோற்ற நோன்பு நிறைவேறுவதாக! உன் நோன்பும் நிறைவேறுக.

ஆண்டாள் : ரொம்ப நன்றியப்பா! பாவை நோன்பையும் முடித்துக் காமனையும் வழி பட்டோம். தங்கள் வாழ்த்துப்போல் எல்லாம் நிறைவேறுக.

பெரியாழ்வார் : எல்லாம் அருள்வானம்மா, அந்தக் கண்ணன்!

ஆண்டாள் : கண்ணன் அருள் வானப்பா?

பெரியாழ்வார் : எல்லார்க்குமே அருள்வானம்மா! அவன் அருளாலே ஆண்டாள், என் கடமையை முடிக்க நினைக்கிறேனம்மா!

ஆண்டாள் : என்னப்பா!

பெரியாழ்வார் : தந்தையின் கடமை மகளுக்காக என்னம்மா? பருவமடைந்து விட்ட பாவையை ஆடவன் ஒருவனிடம் ஒப்படைப்பதுதானே அம்மா முறை! அதனால் உனக்குத் திருமணம் முடித்துவிடலாம்என்று நினைக்கிறேனம்மா!

ஆண்டாள் : திருமணமா?

பெரியாழ்வார் : ஆம் திருமணம் தான்! திருமணம் செய்து கொள்ளத்தானே–நல்ல மணாளன் கிட்ட வேண்டுமென்று தானே–நோன்பு நோற்றாய் ஆண்டாள்! உனக்கு ஏற்ற ஒருவனை மண முடிக்க விழைகிறேனம்மா!

ஆண்டாள் : அப்பா!

பெரியாழ்வார் : என்னம்மா!

ஆண்டாள் : எனக்குத் திருமணம் வேண்டாம்பா!

பெரியாழ்வார் : ஆண்டாள்!

ஆண்டாள் : ஆம் அப்பா எனக்குத் திருமணம் வேண்டாம்.

பெரியாழ்வார் : ஆண்டாள்! ஒரு வயது வந்த பெண் பேசுகிற பேச்சா இது? மனதுக்குகந்த மணாளன் வேண்டித் தானே பாவை நோன்பு நோற்றாய்.

ஆண்டாள் : அதற்காக?

பெரியாழ்வார் : அதற்காக ஒருவனை மணந்து கொள்ள விருப்பம் தானே.

ஆண்டாள் : இல்லை, விருப்பம் இல்லை.

பெரியாழ்வார் : ஆண்டாள் நீ என்னம்மா சொல்லுகிறாய்?

ஆண்டாள் : அப்பா! எனக்குத் திருமணம் செய்தலைப் பற்றியே தாங்கள் சிந்திக்க வேண்டாம்; பேசவும் வேண்டாம்.

பெரிவாழ்வார் : ஆண்டாள்! அதெப்படியம்மா நான் சிந்திக்காமல் இருக்க முடியும்? பேசாமல் இருக்க முடியும்? ஊர் என்ன சொல்லும் ?

ஆண்டாள் : ஊர் என்ன சொல்லும்?

பெரியாழ்வார் : 'வயதுக்கு வந்த பெண்ணை மண முடிக்காமல் வீட்டினிலேயே வைத்துக் கொண்டிருக்கிறான்' என்று என்னை ஊர் மக்கள் சொல்ல மாட்டார்களா? உலை வாயை மூடலாம். ஊர் வாயை மூட முடியுமா?

ஆண்டாள் : ஊர் ஒன்றைச் சொல்லும் என்பதற்காக?

பெரியாழ்வார் : நீ மணந்து கொள்ளத்தான் வேண்டும்.

ஆண்டாள் : மணந்து கொள்வதென்றால் யாரை மணந்துகொள்ளச்சொல்கிறீர்கள், நீங்கள்?

பெரியாழ்வார் : முதலில் மணந்து கொள்ள விருப்பம் சொல்லம்மா, பின்பல்லவா மணமகனைத் தேட வேண்டும். இந்தப் பரந்த உலகில் என் மகளுக்கென்று ஒரு காளை கிடைக்காமலா போவான்? தேடிப் பிடித்து விடுகிறேன்.

ஆண்டாள் : பார்த்தீர்களா, இதற்காகத்தான் எனக்குத் திருமணம் வேண்டாம் என்கிறேன்.

பெரியாழ்வார் : எதற்காக?

ஆண்டாள் : நீங்கள் பார்க்கும் மணமகன் எனக்குப் பிடிக்காது.

பெரியாழ்வார் : அப்போ நீயே பார்த்திருக்கிறாயா?

ஆண்டாள் : ஆம், பார்த்திருக்கிறேன்

பெரியாழ்வார் : யாரம்மா அந்த மணமகன்? சொல்லம்மா?

ஆண்டாள் : நீங்கள் பார்த்தால் மானிடரைப் பார்ப்பீர்கள்.

பெரியாழ்வார் : பின்னே என்ன கடவுளையா பார்ப்பேன்?

ஆண்டாள் : கடவுளைத் தான் பார்க்க வேண்டும்!

பெரியாழ்வார் : ஆ...ஆண்டாள் உனக்கென்ன பைத்தியமா?

ஆண்டாள் : ஆம், பைத்தியம் தான் !

பெரியாழ்வார் : இது என்ன பைத்தியம் ?

ஆண்டாள் : திருமணப் பைத்தியம் !

பெரியாழ்வார் : ஆண்டாள்! என்னைக் குழப்பாதே அம்மா!

ஆண்டாள் : நான் குழப்பவில்லை அப்பா! நீங்கள்தான் குழம்புகிறீர்கள்.

பெரியாழ்வார் : போதும் உன் பேச்சு! பேதைப் பெண்ணே போய்ப்படு! நாளை பேசிக் கொள்வோம்.

(நம்பி, ரெங்கன் பேச்சைக் கவனித்திருத்தல்)

## காட்சி 13

இடம் : தோட்டத்தில் ஒரு பக்கம்

நேரம் : இரவு

உறுப்பினர் : ரெங்கன், நம்பி.

ரெங்கன் : பார்த்தாயடா நம்பி!

நம்பி : பார்த்தேன்டா ரங்கா!

ரெங்கன் : உம்......காலம் மாறிப் போச்சு!

நம்பி : கடவுளையே மணக்கிறேன் என்கிறாளே ஒரு மானிடப் பெண்!

ரெங்கன் : ஆமாம், ஆமாம், கடவுளையே மணப்பாள்! ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஆசை! இந்த ஆண்டாளுக்கோ இந்த மாதிரி ஒரு ஆசை! உம்...எனக்கும் தான் ஒரு ஆசை இருக்கு!

நம்பி : என்ன ரெங்கா! உனக்கும் ஒரு ஆசையா, நாமெல்லாம் துறவி ஆய்ட்டோமே...

ரெங்கன் : கேளு, திருமண ஆசையில்லே ..

நம்பி : ஒகோ சொல்லு!

ரெங்கன் : நான் இப்பவே வைகுந்தம் போயிடலாமென்று ஒரு ஆசையிருக்கு! பரமன் அருள்கிருனு...

நம்பி : நம்பினூர் கெடுவதில்லே; நமது ஆச்சாரியார் பட்டர் பிரான் அடிக்கடி சொல் வாரே; ''சரண்புகு; சரண் புகுந்தவரை விரைந்து ஏற்றுக் கொள்கிருன் பாற் கடல் பரமன். இந்த உயிர் வீடுபேறு அடைய வேண்டுமென்ருல் சரணுகதி முறையே சிறந்தது என்பது தானே வைணவத்தின் கொள்கை'' என்றெல் லாம். ஆகவே பக்தா ரெங்கா! சரண் அடைவாய்!

ரெங்கன் : 'சரணடைந்தேன், பக்தர்க்கருளும் பரந்தாமனே!' என்று இந்த ஆண்டாளும் சரணடைந்திருப்பாளோ! 'திருமாலுக்கே திருமாலே போடுவேன்' என்கிருளே! உம்... இதைக் கேட்டா...யாராவது நம்புவார்களா?

நம்பி : நாம் தான் நம்புகிறோமா? [கொட்டாவி விட்டுக் கொண்டு] சரி. நமக்கும் உறக்கம் வந்து விட்டது. வா போய்ப் படுத்துக் கொள்வோம்.

## காட்சி 14

இடம் : பெரியாழ்வார் வீட்டின் ஒரு புறம்

நேரம் : காலேப் போது

உறுப்பினர் : ஆண்டாள், நப்பின்னே.

[ஆண்டாள் திருமாலிடத்துத் தன் காதலேத் தெரிவிக்கும்படி மேகங்களைத் தூது விடல். பாடல் இயற்றல்......ஓலேயும், எழுத்தாணியும் கையில் நாச்சியார் திருமொழிப் பாடல்]

ஆண்டாள் : மென்னடை அன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத் தூருறை வான்றன்
பொன்னடி காண்பதோர் ஆசையி னுல்என் பொருகயற் கண்ணிணை துஞ்சா
இன்னடி சில்லொடு பால் அமுதூட்டி எடுத்தஎன் கோலக் கிளியை-
உன்னெடு தோழமை கொள்ளுவன் குயிலே! உலகளந் தான்வரக் கூவாய்.

பின்னே : என்னடி உன் காதல்?

ஆண்டாள் : என்னடி தோழி! அப்பா, யாரையோ மணக்கச் சொல்வார் போலிருக்கே.

பின்னே : அதனுல் கண்ணனுக்குத் தூது விடுகிருய்! தூது விடுக்கும் பாடலேயும் இயற்றுகின்ருய்.

ஆண்டாள் : வேறு என்னடி தோழி செய்யச் சொல்கிருய்?

பின்னே : முன்பு பாவை நோன்பு நோற்ருய்; இது போலவே எல்லாக் கன்னிப் பெண் களும் பாவை நோன்பு நோற்க வேண்டுமென்று முப்பது திருப்பாவைகளேயும் பாடி வைத்தாய். வேதத்தின் சாராம்சத்தை யெல்லாம் தொகுத்துத் திருப் பாவையாகப் பாடியிருக்கிருய் என்று எல்லாரும் சொல்ருங்க. இப்போது தூதுப் பாடல் பாடுகிருய். உம் அந்த மாயக்கண்ணன் உனக்கு அருள வேண்டும்!

ஆண்டாள் : அருள்வானு தோழி?

பின்னே : உம்...என்னமோ கனவு காண்கின்ருய். கனவு காண்பதென்ன

ஆண்டாள் : தோழி? கனவே கண்டேன்!

பின்னே : உண்மையாகவா ?

ஆண்டாள் : ஆம் தோழி; கேள்.
''வாரணம் ஆயிரம்............'' [பாடல்கள்]

(தொடரும்)

# "இராவண அனுக்கிரகமூர்த்தி"

ஏ. ஏகாம்பரநாதன், எம்.ஏ.,

இலங்கையரயன் இராவணன் குபேரனை வென்றபின்னர் புட்பக விமானத்திலிவர்ந்து தன் நாட்டிற்குப் புறப்படும் வழியில் கயிலை மலைப் பகுதியை அடைந்தான். இமய வெற்பிற் நின்ற நந்தியெம் பெருமானிடம் அதன் காரணத்தை வினவினன். அதற்கு நந்தி கேஸ்வரர் சிவனும், உமையும் கயிலையில் இனிது கூடி மகிழ்ந்திருத்தலால், அப்பகுதியில் எவரும் புகுதல் கூடாது என இறைவன் கட்டளை பிறப்பித்திருப்பதாகக் கூறினர். இதனல் சினமுற்று இராவணன் இறைவனும், இறைவியும் அமர்ந்திருந்த இமய வரையினைத் தன் கரங்களால் பற்றியெடுக்க முயன்றபோது, செஞ்சடையண்ணல் தம் காற்பெருவிரலால் மலையினை அழுத்தவும், இலங்கை மன்னன் வலிகுன்றி செய்வதறியாது சிவபிரானை வாழ்த்தி வணங்கினன். இதனல் மனம் மகிழ்ந்த மங்கையோர்பங்கன் மன்னனுக்கருள் புரிந்து வெற்றியளிக்கும் வீரவாளொன்றினைப் பரிசாக வழங்கினர். இச்செய்தி வால்மீகி இராமாயணத்திலும், புராணங்களிலும் காணப்படுகிறது.

தமிழ் இலக்கியங்கள் :

சங்ககால இலக்கியங்களுள் கலித்தொகையில் மட்டும் ஐயிரு தலைகளையுடைய அரக்கர் கோமான் தன் தடக்கைகளால் இறைவனும், இறைவியும் அமர்ந்திருந்த இமயவரையினைப் பெயர்த்தெடுக்க முயற்சித்து இயலாது உழன்றனன் என்று குறிப்பிட்டுள்ளது. (கலி : 38 : 1–5). திருமந்திரத்தில் இலங்கையரசனுக்கு எம்பெருமான் அருள்கூர்ந்து வாளினைக் கொடுத்த செய்தி இடம் பெற்றுள்ளது. (திருமந் : 350). ஞானசம்பந்தர் தமது தேவாரத் திருப்பதிகங்களுள் மிக்கவாறும் எட்டாவது பாடல்களில் இராவண அனுக்கிரக மூர்த்தியையும், அவரது சிறப்பினையும் கூறியுள்ளார். தேவாரத்திற்குப் பின்னர் தோன்றிய இலக்கியங்களிலும் இச்செய்தி இடம் பெற்றுள்ளதைக் காணலாம். மேற்கூறியவற்றல் தமிழகத்தில் இராவணனுக்கு இறைவன் அருள்புரிந்த வரலாறு சங்ககாலத்திலிருந்தே வழங்கப்பட்டு வந்ததை நன்குணரலாம்.

சிற்பங்கள் :

தமிழகத்தில் பல்லவர் காலக் கட்டடக் கோயில்களில் இராவண அனுக்கிரகமூர்த்தி சிற்பங்கள் இடம் பெற்றுள்ளனவேயன்றி, குடைவரை, ஒற்றைக் கற்கோயில்களில் காணப்படவில்லை. இம்மன்னர்களது கட்டடக் கோயில்களாகிய கைலாசநாதர், முக்தேஸ்வரர், மாதங்கேஸ்வரர், பிறவாதேஸ்வரர், திரிபுராந்தகேஸ்வரர், ஒலக்கணேஸ்வரர் முதலியவற்றில் இச் சிற்பங்களுள்ளன. ஒருசில கோயில்களைத் தவிர மிக்கவாருன கோயில்களில் அர்த்த மண்டபத்தின் வடபுறச்சுவரில் இறைவனும், இறைவியும் அமர்ந்திருக்கும் இமயவெற்பினை இலங்கையரையன் அசைக்க முயற்சி செய்யும் காட்சி அழகுற சமைக்கப்பட்டுள்ளது. பாண்டியர் காலக் குடைவரைக் கோயிலாகிய திருப்பரங்குன்றம் குடைவரையிலும் இத்தகைய சிற்பம் இடம்பெற்றுள்ளதைக் காணலாம். சோழர் காலத்தில் இராவண அனுக்கிரக மூர்த்தி சிற்பங்களைக் கோயில்களில் அமைக்கும் வழக்கம் இல்லை. ஆனல் பழையாறையிலுள்ள சிவன் கோயிலில் மட்டும் சோழர்காலச் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. (சென்னைப் பல்கலைக்கழக மலர். 1960, பக்கம். 185). விசயநகர அரசர்களாட்சி நிறுவப்பட்ட மண்டபத் தூண்கள் சிலவற்றில் சிறிய அளவில் இராவண அனுக்கிரக மூர்த்தி சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் மட்டுமின்றி பிற மாநிலங்களிலுள்ள கோயில்களிலும் இச் சிற்பங்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

கல்வெட்டுகள் :

மாமல்லையிலுள்ள தர்மராசர் மண்டபத்தில் காணப்படும் கல்வெட்டொன்றில், பத்து தலைகளையுடைய அரக்கர்கோமான் கயிலையைத் தூக்க முயன்றபோது தனது கால் பெரு

விரலால் பாதாளம்வரை அழுந்தும்படி செய்த சிவனது பொற்பாதங்களைத் தன் முடியினில் சூடிக்கொள்பவன் இராசசிம்ம பல்லவன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. (S.I.I. Vol. 1. P. 6). இச்செய்தியினைக் கொண்ட மற்றுமொரு பல்லவர் காலக் கல்வெட்டு இவ் வூரிலுள்ள கணேசர் ரதத்திலும் காணப்படு கிறது. இக் கல்வெட்டுச் செய்திகளையும், சிற்பங்களையும் நோக்குமிடத்து பல்லவர் காலத் தில் இராவண அனுக்கிரக மூர்த்திக்கு மிக முக்கியத்துவம் கொடுத்திருப்பதை நன்குணர லாம்.

திருவிழா :

பொதுவாக திருவிழாக் காலங்களில் இறைவன், இறைவியரது உலோகத் திரு மேனிகளைத் தேரில் அல்லது வாகனங்களில் வைத்து ஊர்வலமாகக் கொண்டுசெல்லுதல் வழக்கமாகும். தற்காலத்தில் தமிழகத்திலுள்ள சில சிவன் கோயில்களில் பத்தாவதுநாள் திருவிழாவின்போது, சிவனும், உமையும், வீற்றிருக்கும் கயிலையை இராவணன் பற்றி எடுக்க முயலும் காட்சி ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுகிறது. பல்லவர் கோநகராகிய காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் கோயில் திருவிழாவின்போது இந்நிகழ்ச்சி மிகவும் சிறப்புற நடைபெறுவதைக் காணலாம்.

தத்துவப் பொருள் :

மும்மலங்களுள் ஒன்றாகிய ஆணவ மலத்தை அறவே அகற்ற வேண்டும் என்ற அடிப்படைக் கருத்தினைக் கொண்டதே இராவண அனுக் கிரக மூர்த்தத்தின் தத்துவப் பொருளாகும். மூவுலகும் முடியாண்ட இராவணன் தன் தோள் வலிமையால் - தனக்கொப்பார் எவரு மில்லை என்ற ஆணவத்தால், மலைமகளும், மங்கையோர்பங்கனும் அமர்ந்திருந்த கயிலையைப் பெயர்த்தெடுக்க முயற்சி செய் கிறான். ஆனால், இறைவனது கால்விரலால் மிதியுண்ட இமயத்தின் சுமை தாங்காது அரக்கர் தலைவன் உடல்வலியை இழக்கிறான். அப்போது அவனிடமிருந்து ஆணவ மலம் அழிந்தொழிகிறது. தன்னிலும் வலிமை மிக்க சக்தி ஒன்றிருப்பதை உணருகிறான். இதனால் இறைவனது பெருமையினை எண்ணி நெஞ்சம் நெக்குருகி வாழ்த்தி வணங்குகிறான். தீய வழியில் செல்லும் கொடியோரைத் திருத்தி நல்வழிப்படுத்துதல் இறைவனது பண்பாகும். எனவே தனது தவறுணர்ந்து முழுமுதற் பொருளை வாழ்த்திய இராவணனுக்குச்செஞ் சடையீசன் கருணைகூர்ந்து அருள் பாலிக் கிறார். தீவழிச் சென்றவன் திருந்தியகாலை இறைவனது அருள் கிடைக்கப்பெறுவான் என்பது இதனால் நன்கு விளங்கும்.

## அர்ச்சகர் மனைவி ஆணாக மாறிய அற்புதம்

வடஆர்க்காடு மாவட்டத்தில் ஒரு சிற்றூர். அங்கு ஒரு சிவன் கோயில் உண்டு. நாள்தோறும் அர்ச்சகர் ஒருவர் பூசை செய்து வந்தார். ஒரு சமயம் அவர் நோய்வாய்ப்பட்டு படுக்கையில் கிடக்க நேர்ந்தது. நாள் பூசைக்கு முட்டுப்பாடு ஏற்பட்டது. கடவுளுக்குப் பூசை நிவேதனம் இல்லாம லிருக்கிறதே யென்று அர்ச்சகர் மனைவி கவலைப்பட்டு வருந்தினாள். தானே பூசை செய்வது என்று துணிந்தாள். பெண்கள் பூசை செய்யக் கூடாது என்பது விதி. எனவே அவள் யாருக்கும் தெரியாமல் நாள்தோறும் கோயிலுக்குச் சென்று பூசையைச் செய்துவநதாள். ஒருநாள் ஊரான் ஒருவன் இதைப் பார்த்து விட்டான். ஊர் மக்களிடம் இதைச்சொன்னான். அவர்களும் அவளைக் கையோடு பிடிக்க வேண்டுமென்றுமுடிவு செய்தனர். அன்று அர்ச்சகர் மனைவி புறப்பட்டுப் போவதை மறைந்திருந்து பார்த்தனர். அவள் கோயிலுக்குள் செ‌ன றபின் கோயிலின் வாயிலில் இருபுறமும் பதுங்கி ஒளிந்திருந்தனர். அந்தப்பெண் உள்ளே-சென்றவள் பூசை முதலிய வற்றை முடித்து கோயிலின் வெளிவாயிலுக்குத் திரும்பினாள். ஊர் மக்கள் அவளைப்பிடிக்க ஆயத்த மாக இருந்தனர். என்ன அற்புதம்! வந்தது அர்ச்சகர் மனைவியல்ல. அர்ச்சகராகவே தோன்றி னார். மக்கள் திகைத்துப் போனார்கள்; ஏமாற்ற மடைந்தார்கள்; தங்கள் கண்களையே நம்ப முடிய வில்லை. சிவபெருமான் தமக்குப் பூசை நிவேதனத்திற்கு முட்டுப்பாடு வராமல் செய்த அந்தப் பெண்மணியை-அவளுக்கு வர இருந்த துன்பத்திலிருந்து காப்பாற்றிய பெருங்கருணைத் திறத்தை வியந்து பாராட்டாமலிருக்க முடியுமோ! பெண் ஆணாக மாறிய நிகழ்ச்சி நடந்ததால் அவ்வூருக்கு ஸ்த்ரீபுருஷமங்கலம் அல்லது சீபுருடமங்கலம்என்று இப்போதும் வழங்கி வருகிறது.

(புலவர் திருமதி சிவகாமி அம்மாளின் வடஆர்க்காடு கோயில் வரலாறுகளிலிருந்து எடுத்து எழுதியது.)

க. கலியாணம், எம்.,ஏ.

# எனது வாழ்க்கை வழிகாட்டிகள்

திரு. வே. சாமிநாத சர்மா



இலட்சியம், இலட்சியம் என்று பேசுகிறோம். அது என்ன?

சுட்டிக்காட்ட முடிந்தாலும் தொட்டுக் காட்ட முடியாதது எதுவோ, நாடி நாடிச் சென்றாலும் ஓடி ஓடிப்போவது எதுவோ, நினைக்குமளவில் நினைக்கிறவர்களுடைய சிறுமையை உணர்த்துவது எதுவோ, உணர்த்துவதோடு நில்லாமல் அவர்களை உயர்நிலைக்கு உந்துவது எதுவோ அதுதான் லட்சியம். உவமை காட்டிச் சொல்ல வேண்டுமானால், லட்சியம் என்பது தொடுவானம் மாதிரி. அது நம் பார்வைக்குத் தென்படுகிறது; ஆனல் கைக்கு அகப்படுவதில்லை. இதில்தான் அதன் பெருமையெல்லாம் இருக்கிறது.

கைக்கு அகப்படாது என்று தெரிந்திருந்தும் அதனை நாடிச் செல்கின்றனர் ஒருசிலர். ஆம்; ஒருசிலர்தான்; விரல்விட்டு எண்ணிவிடக் கூடியவர்கள்தான். இவர்களையே லட்சிய புருஷர்கள் என்றும், மகான்கள் என்றும் பல பெயர்களிட்டுப் பிற்கால உலகம் போற்றுகிறது. ஆனல் இவர்களுடைய சமகாலத்தவர் இவர்களைப் பித்தரென்றும், பேயரென்றும், உலகத்தோடு ஒட்டி வாழத் தெரியாதவரென்றும் பலவாருகப் பேசுகின்றனர். காலம் நெடுகிலும் இஃதொரு நியதியாகவே இருந்து வந்திருக்கிறது.

இங்ஙனம் தங்கள் சமகாலத்தவர் தங்களைப் பலவாருகப் பேசிய போதிலும் இப்படிப் பேசுகிருர்களே என்று இவர்கள்-இந்த லட்சிய புருஷர்கள்-வருத்தப்படுவதில்லை. இதற்கு மாருக, அவர்கள் மீது இவர்கள் அறியாமைக்காக இரக்கங் காட்டுகிருகள். அதுமட்டுமல்ல; அந்த அறியாமையை அகற்றி அதன் இடத்தில் அறிவு விளக்கை ஏற்றி வைக்கிருர்கள். இதற்காக இந்த மகாபுருஷர்கள் படுகின்ற துன்பமும் அடைகின்ற மனவேதனையும் சொல்லி முடியாது. ஆனல், இவைகளைப் புன்சிரிப்போடு சகித்துக் கொள்கிருர்கள். ஏன்? பிறருடைய இன்பத்திற்காக, வலிய, துன்பத்தை ஏற்று அனுபவிப்பதில் தனிப்பட்டதொரு மகிழ்ச்சி இருக்கிறதென்னும் ரகசியத்தை இவர்கள் நன்கு உணர்ந்தவர்கள்.

இப்படி வலிய துன்பத்தை ஏற்று மகிழ்ச்சி கொள்வதோடு இவர்கள் திருப்தி அடைவதில்லை. இதற்கு மேலாகவும் ஒருபடி செல்கிருர்கள். தாங்கள் துன்பம் அனுபவிப்பதற்குக் காரணமாக இருந்தவர்கள் யாரோ, அவர்களுடைய நன்மையையும் நாடுகிருர்கள். "இன்னுசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு" என்னும் கேள்வியை, இவர்கள் உள்ளம் ஒவ்வொரு கணமும் கேட்டுக் கொண்டே செயல் புரிகிறது.

இந்தச் சான்ருேர்கள், நான், எனது, எனக்கு என்ற பற்றற்றவர்கள். இவர்களுக்கு எரிக்கின்ற வெயிலும், குளிர்விக்கின்ற நிலவும் பஞ்சணைப் படுக்கையும் பருக்கைக்கல் பரப்பும் பெரிய மாளிகையும் சிறிய குடிலும் எல்லாம்

ஒன்றுதான். இடத்தினுலோ, சூழ்நிலை காரண மாகவோ இவர்கள் உள்ளம் மாறுபடுவதில்லை. இன்பமும், துன்பமும் இவர்களுக்கு ஒன்றே. இன்பம் நுகரும்பொழுது இவர்கள் தலை தெறிக்க ஆடுவதுமில்லை; துன்பம் அனுபவிக் கிறபொழுது தலைகுனிந்து வாடுவதுமில்லை. இவர்கள் உள்ளத்தில் கொஞ்சும் குழந்தையும், சீறும் பாம்பும் சம இடம் பெறுகின்றன. இத் தகையவர்களை ஸ்திதப் பிரக்ஞர்கள் என்றும் ஜீவன் முக்தர்கள் என்றும் கீதை அழைக்கின் றது.

இந்தச் சான்ருேர்கள், தாங்கள் கொண் டுள்ள லட்சியத்தைப் போலவே அதனை நாடிச் செல்லும் பாதையும் தூய்மையுடையதாய் இருக்க வேண்டுமென்பதில் உறுதியுடையவர் களாய் இருக்கிருர்கள். நாடுகின்ற குறியும் அதனை அடைகின்ற நெறியும் ஒரே தன்மைத் தாய் இருக்க வேண்டுமென்பதில் இவர்கள் மிகக் கண்டிப்பு உடையவர்கள்.

இதனுல் இவர்களுடைய வாழ்க்கைப் பாதை செப்பனிட்ட பாதையாக இருப்பதில்லை. நெருஞ்சில் முள் நிறைந்ததாகவோ, ஏறுமேடு களும் இறங்கு பள்ளங்களும் உடையதாகவோ, அடிக்கொரு திருப்பமுடையதாகவோ இருக் கிறது. இருந்தாலும் முன்னேக்கிச் செல்வதில் இவர்கள் தயக்கம் காட்டுவதில்லை; கொண்ட குறிக்கோளினின்று தங்கள் பார்வையைத் திருப்பிக் கொள்வதுமில்லை.

மற்றும் இந்தச் சான்ருேர்கள், வானம் துளங்கினும் மண்கம்பமாகிலும் உண்மை யையே கடைபிடிப்பர். ஊழிபெயரினும் இவர் பெயரார் தம் நிலையினின்று. இதனேடு இவர் கள் திருப்தி அடைவதில்லை. மற்றவர்களும் தங்கள் நிலைக்கு, உண்மையைக் கடைப்பிடிக் கின்ற நிலைக்கு வரவேண்டுமென்று விரும்பு கிருர்கள். இதற்காக வாழ்க்கையின் பல துறைகளிலும் தலையிட வேண்டியது இவர் களுக்கு அவசியமாகி விடுகிறது. இரவென் றும் பகலென்றும் வேறுபாடு அறியாது உழைக் கிருர்கள்.

இப்படி பல துறைகளிலும் இவர்கள் கலந்து உழைப்பதால் இவர்களுடைய சொற் களையும் செயல்களையும் மேற்போக்காகப் பார்க்கிறவர்களுக்கு அவற்றில் பல முரண்பாடு கள் இருப்பதாகத் தோன்றக்கூடும். உண்மை யில் அப்படியில்லை. அடிப்படையில் ஒரே விதமான கருத்தோட்டத்தைக் காணலாம்.

இந்த மகான்கள் வெளிப்பார்வைக்கு உலகத் தோடு ஒட்ட ஒழுகாதவர்கள்போல் காணப் படினும், உண்மையில் உலக இயல்பு அறிந்த வர்கள்; தங்களை அண்டிவரும் பிரதியொரு மனிதனுடைய அறிவுப் பக்குவம், மனப் பக்கு வம் முதலியவைகளை எளிதிலே கண்டு கொண்டுவிடும் தனி ஆற்றல் இவர்களுக்கு இருக்கிறது. இவர்களுடைய அறிவுரைகளும் பலதர வாழ்க்கையினருக்கும் பயன்படுவன வாய் இருக்கின்றன.

இத்தகைய தன்மைகளைக் கொண்ட மகான்கள், பல காலங்களிலும், பல நாடுகளி லும் அவதரித்து வந்திருக்கிருர்கள். இவர்கள் அனைவரும் கடவுட் தூதர்கள்; நிகழ்காலச் சமுதாயத்தின்மீது படிந்து கிடக்கும் மாசு மறுக்களைத் துடைப்பதற்காகக் கடவுளால் சமைக்கப்பட்ட கருவிகள்; அந்தச் சமுதாயத் தின் ஆசாபாசங்களைப் பிரதிபலித்துக் காட்டும் கண்ணுடிகள்; அதன் வருங்காலத் தேவைகளை அறிந்து இனிமையோடு அறிவிக்கும் ஊது குழல்கள். இவர்கள் பேசுவது சமுதாயத்தின் குரல்; வாழ்வது சமுதாயத்தின் வாழ்க்கை.

இவர்கள் அனைவரும் என் இதய பீடத்தில் எப்பொழுதும் கொலு வீற்றிருக்கிருர்கள். இவர்கள் அடிச்சுவட்டிலே செல்ல வேண்டும் என்பதே என் குறிக்கோள். அதற்கேற்ற தகுதி இப்பிறவியில் எனக்கு இல்லை. இதை நான் நன்கு உணர்ந்திருக்கிறேன். ஆனுல் இந்தத் தகுதி எனக்கு அடுத்தடுத்த பிறவி களிலாவது கிட்ட வேண்டும் என்று பிரார்த் தித்துக் கொண்டிருக்கிறேன்.

உலகனைத்தையும் ஆட்டி வைக்கின்ற பரம் பொருள் ஒன்று உண்டு என்பதில் திட நம்பிக்கை கொண்டவன் நான். கனவிலும்

என்னை விட்டு அகலாத இந்த நம்பிக்கைதான் வறுமைச் சுழல்களினின்றும் பயங்கர நோய்களினின்றும் பல தடவை என்னைக் காப்பாற்றி வந்திருக்கிறது.

இந்தக் கடவுள் நம்பிக்கையைப் பக்தி யென்றும் சிரத்தையென்றும் பலவாறாகக் கூறுவர் ஆன்றோர். எவனிடத்தில் கடவுள் நம்பிக்கை இருக்கிறதோ அவனிடத்தில் தன்னம்பிக்கை தானாகவே வந்து குடிபுகுந்து விடுகிறது. இவையிரண்டும் எண்ணெயும் திரியும் போன்றவை. இவ்விரண்டையும் பற்றுக் கோடுகளாகக் கொண்டவன், அறிவு செல்ல முடியாத இடங்களிலெல்லாம் துணிந்து செல்வான். அறிவினால் செய்து முடிக்க முடியாத காரியங்களையெல்லாம் இவனால் சாதிக்க முடியும். ஆனால், துரதிருஷ்ட வசமாக இந்த இருபதாம் நூற்றாண்டில், விஞ்ஞானமானது மனிதனுடைய அறிவை மட்டும் வளர்த்துக் கொடுத்திருக்கிறது. அதற் கேற்ற அளவில் அவனுடைய இதயம் விரிய வில்லை. அவனிடத்திலே யுள்ள அசுரசம்பத்து கள் கொக்கரித்துக் கொண்டு கும்மி அடிக்கின் றன. அவனிடத்தில் நியாயமாக இருக்க வேண்டிய தெய்வ சம்பத்துகள் அடங்கி ஒடுங்கிக் கிடக்கின்றன. இன்றைய மனிதன் ஆகாயத்திலே பறக்கிறான்; நீரிலே நீந்து கிறான்; ஆனால் பூமியின்மீது நடக்கக் கற்றுக் கொள்ளவில்லை. அவனை நடக்குமாறு செய்ய என்னாலியன்ற பணியைச் செய்ய வேண்டும் என்பது என் ஆவல். இதற்கு எனது எழுது கோலையே கருவியாக உபயோகித்து வருகி றேன். இதனால் நீடித்த பயன் கிட்டுமா என்ற கேள்வி என்னகத்தே எழாமல் இல்லை. இந்தக் கேள்விக்குச் சரியான விடையளிக்க வேண்டுமாயின் நான் மனிதனாக வாழ முற்பட வேண்டும். வாழ்க்கையைப் பற்றி உபதேசிப் பதைக் காட்டிலும் வாழ்க்கையை வாழ்ந்து காட்ட வேண்டுமென்பதில் அசைக்க முடியாத உறுதியுடையவன் நான். மனிதனாக வாழ்கி றேனா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் மனிதனாக வாழ வேண்டுமென்ற ஆசை எனக்கு நிரம்ப இருக்கிறது. அது நிறைவேறுமா இல்லையா என்பதைக் காலந் தான் கூறவேண்டும். அந்த ஆசையே எனக்கு ஊக்கம் தருவதாயிருக்கிறது.

ஆனால் எனக்கு அமைந்திருக்கிற சூழ்நிலை யில் அந்த ஆசை கொண்டிருப்பது, அதனை உறுதியாகப் பற்றிக்கொண்டிருப்பது எவ் வளவு கடினமாக இருக்கிறதென்பதை, நான் செலவழிக்கிற ஒவ்வொரு கணத்திலும், விடு கிற ஒவ்வொரு மூச்சிலும் அனுபவித்து வருகிறேன். இதற்காக நான் வருந்துவதில்லை; எண்ணி எண்ணி ஏங்குவதுமில்லை. சோதனை யில் இன்பம் இருக்கிறதென்ற உண்மையை உணர்ந்தவன் நான். சோதனைக் களத்திற்குத் தகுதியுடையதாக என் வாழ்க்கை அமைந் திருக்குமானால் அதைக் காட்டிலும் எனக்கு நற்பேறு வேறு என்ன இருக்கிறது?

பணம், பட்டம், பதவி இவற்றிற்கு நான் ஆசைப்பட்டது கிடையாது. இவை என்னை மயக்கியதும் இல்லை. இவை செய்யும் ஓசை, எனது செவிப்புலனுக்கு வெளியே வட்ட மிட்டுத் திரும்பி விடுகிறது. இவற்றின் உருட் டல் மிரட்டல்கள் என்னை உலுக்கிக் கொடுப் பதுமில்லை. இவற்றினின்று என்னைக் காப் பாற்றி வந்திருக்கிற ஆண்டவனே, உனக்கு ஒரு கோடி நமஸ்காரம்.

சிறு பிராயத்திலிருந்தே, உடுத்தும் உடை முதல் வாழும் மனைவரை எதிலும் ஆடம்பரம் புகுவதை நான் விரும்பியதில்லை. இதனால் என்னுடைய தேவைகள் தாமாகவே சுருங்கிக் கொண்டு விட்டன. உடைமைகளைப் பற்றிய கவலையும் என்னை விட்டு அகன்றிருக்கிறது.

ஒழுங்கும் ஒழுக்கமும் என் வாழ்க்கை வண்டியின் இரண்டு சகடங்கள். கண்ணும் கருத்தும் செலுத்தி இவைகளைக் காப்பாற்றி வருகிறேன். என் எழுத்துக்களில் இவற்றை அதிகமாக வலியுறுத்தி வந்திருக்கிறேன். மனிதன் இரண்டு கால் பிராணியாக நடமாடிக் கொண்டிராமல் மனிதத் தன்மையோடு கூடிய வனாக வாழ வேண்டுமானால் அவன் ஒழுங்கை யும் ஒழுக்கத்தையும் ஊன்றுகோல்களாகக்

கொள்ள வேண்டும். அப்படி அவன் கொள்வதற்கு என் எழுத்துக்கள் துணைபுரியுமானல் மனித வாழ்க்கையின் முதற்படியில் அடியெடுத்து வைத்தவனுவேன்.

எந்த விதமான உரிமையையும் போராடிப் பெறுவதில் எனக்கு நம்பிக்கை இல்லை. அதற்கு மாருக, கடமையைச் செய்து கொண்டு போனல் உரிமை தானே வந்தெய்தும் என்பதில் அதிக நம்பிக்கை யுடையவன் நான். எல்லைக்குட்பட்ட உரிமைக்காகப் போராடுவதில் கிடைக்கும் இன்பத்தைக் காட்டிலும் எல்லையற்ற கடமையைச் செய்து கொண்டு போவதில் கிடைக்கும் இன்பம் புனிதமானது, நிலையாயிருப்பது என்னும் உண்மையை நான் ஒருவாறு உணர்ந்திருக்கிறேன். சிறுவயதிலிருந்தே என் சொந்த நன்மைக்காக எந்த விதமான உரிமையையும் நான் கொண்டாடியது கிடையாது. இதற்காக என் கடமைகளில் தவறியதுமில்லை.

நான் ஒரு தந்தையில்லை. அந்தப் பாக்கியம் இந்தப் பிறவியில் எனக்குக் கிட்டவில்லை. அதற்காக நான் வருத்தப்படுவதும் கிடையாது. ஏனென்ருல் அந்த இல்லாமையானது, அதாவது எனக்கென்று குழந்தைகள் இல்லாதது, விசுவப்பிரேமை யென்னும் விசாலமான கோயிலை நாடிச் செல்ல வேண்டுமென்ற ஆசையை என்னிடம் தூண்டி விட்டிருக்கிறது. என்னை விசுவமித்ரனுக்குமாறு ஆண்டவனைச் சதா வேண்டிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய நூல்கள் என்னுடைய குழந்தைகளாக இருந்து என் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்குமானல் அதுவே என் ஆத்மாவிற்குத் திருப்தியாக இருக்கும்.

என் மீது சொல்லம்பு தொடுத்தாரை நான் திருப்பிச் சொல்லம்பால் தாக்கியதில்லை; தீங்கிழைத்தாரை நொந்து கொண்டதில்லை; கோபக்கனலைக் கக்கினுரைச் சாபமிட்டதில்லை. இவையெல்லாம் இளமையிலிருந்தே என் சுபாவங்களாய் அமைந்து விட்டன. இதனுல் என்னைக் கோழையென்று கூறுவோர் சிலர்; குற்றத்தையும் சகித்துக கொண்டு போகிறவன் என்று கருதுவோர் சிலர்; அளவு கடந்த பொறுமையைக் கையாள்வதாக என்மீது பரிவு காட்டிப் பேசுவோர் சிலர். யார் எப்படி வேண்டுமானுலும் சொல்லட்டும், கருதிக் கொள்ளட்டும், இந்த நிலையினின்று-அதாவது பதிலுக்கு பதில் எண்ணுத, சொல்லாத, செய்யாத நிலையினின்று சிறிதும் பிறழ என் மனம் இடந்தருவதில்லை. பிறழாது இருக்குமாறு என்னைக் காப்பாற்ற வேண்டுமென்பது, கடவுளை நோக்கி நான் செய்யும் பிரார்த்தனைகளில் ஒன்று. இதற்காக, “ஆவியோடு காயமழிந்தாலும் மேதினியில் பாவியென்ற நாமம் படையாதே” என்ற பட்டினத்தடிகளின் வாக்கை அடிக்கடி என் நினைவிலே கொண்டு வந்து நிறுத்திக் கொள்கிறேன்.

அறிவு விளக்கம் பெறுவதற்காகவோ, ஆன்ம விளக்கம் பெறுவதற்காகவோ தனிப்பட்ட எந்த ஒரு ஆசிரியரையும் நான் நாடியதில்லை. சீடனுய் இருப்பதற்கான பக்குவ நிலையை நான் இன்னும் அடையவில்லை போலும்! பக்குவமடைந்த சீடனை ஆசிரியர் நாடி வருவாரென்னும் ஆன்ருேர் வாக்கில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனல் அதற்காக நான் ஏங்கி நிற்கவுமில்லை. உலகத்தில் அவதரித்திருக்கிற அத்தனை மகான்களும் எனக்கு நல்வழிகாட்டும் ஆசிரியர்களாகத் திகழ்கிருர்கள். ராமனும், புத்தனும், ஸாக்ரடீஸூம், யேசுவும், கன்பூஷியஸூம் காந்தியும், ஆழ்வார்களும், நாயன்மார்களும்-இப்படி உலகத்தில் எந்தெந்த நாட்டில் எந்தெந்தக் காலத்தில் அவதரித்திருக்கிருர்களோ அத்தனை பேரும் என் வந்தனைக்கும் வழிபாட்டுக்கும் உரிய குருமூர்த்திகளே. இவர்களை நோக்க நோக்க சிறுமை எனக்குப் புலனுகிறது. அடியார்க்கும் அடியனுய், பணிந்தார்க்குப் பணிபுரிகின்றவனுய், என்னை ஆக்கித் தூய்மைப்படுத்துமாறு ஆண்டவனை அனுதினமும் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

நான் வசிப்பது சிறுகுடில்தான். ஆனல் என் மனப்பறவை, நீலத்திரை கடலோரத்திலும், வானந்தொடு மலையடிவாரத்திலும், ஆற்றங்கரைமீதும் எந்நேரமும் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறது.

நான் பிடிப்பது சிறிய எழுதுகோல்தான். ஆனல் அதைக்கொண்டு உலகனைத்தையும் அளந்து பார்க்க ஆசைப்படுகிறேன்; என் இனிய தமிழில் அளந்துகாட்ட விரும்புகிறேன்.

பெண்மையைப் போற்றுகின்றவன், நான். அதில் அழகு, இனிமை, அன்பு, தியாகம் எல்லாம் சேர்ந்து உறவாடுவதைக் காண்கிறேன். நாற்பத்திரண்டு ஆண்டுகள் என்னேடு இணைபிரியாது வாழ்ந்திருந்த அந்த ஒருத்தியைத் தவிர, அந்த மங்களத்தைத்தவிர, வேறுஎந்தப் பெண்ணுருவத்தின் மீதும் என்னிருகண்களோ ஒருமனமோ சென்றதில்லை யென்பதைப் பெருமிதத்தோடு கூறிக் கொள்கிறேன்.

புறத்துறவு பூண்டு நான் வாழ வில்லை; ஆனல் அகத்துறவைப் பேணி வளர்த்து வருகிறேன்.

எனது உடலம் முதுமைப் பாதையில் மெதுமெதுவாகச் சென்றுகொண்டிருக்கிறது. ஆனல், எனது உள்ளம் இளமை ஊற்றில் நீராடிய வண்ணம் இருக்கிறது.

இசை முழக்கும் ஆற்றல் எனக்கு இல்லை; ஆனல் இசைவடிவமான ஆண்டவனை நேரில் காணவேண்டுமென்ற ஆசை நிறைய இருக்கிறது. அவனுடைய கருணை எவ்வாறிருக்கிறதோ அறியேன்.

மறுபிறவியில் எனக்குப் பரிபூரண நம்பிக்கையுண்டு. இதனல் அடுத்த பிறவியிலே, தமிழ்நாட்டிலே, தமிழனகப் பிறக்க ஆசைப்படுகிறேன். ஏனென்ருல், தமிழ்த்தாயின் திருவடிகளுக்கு என்னுடைய காணிக்கையாகச் செலுத்த வேண்டிய நூல் மாலைகள் இன்னும் எத்தனை எத்தனையோ இருக்கின்றனவல்லவா?

"ஸர்வே ஜனு சுகினேபவந்து"
"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேருென்றுமறியேன் பராபரமே."

இவையே என்னுடைய இந்த வாழ்க்கையின் மூலமந்திரங்கள்.

---




## கல்லெறிந்த நல்லோர்

“வார் கொண்டவன முகையாள்
உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த
சாக்கியர்க்கும் அடியேன்”
—சுந்தரர் திருத்தொண்டத் தொகை.

தூய உள்ளமுடையோர் பேசும் வன்சொல் நன்மைபயக்கும். அழுக்கு நெஞ்சத்தினர் கூறும் இன்சொல் தீமை பயக்கும். இந்த உண்மையை விளக்க வந்த அருட்கவி, இரண்டு புராணகதைகளை எடுத்துக் காட்டினார். ஒன்று, சாக்கிய நாயனார் சிவலிங்கத்தின் மேல் கல் எறிந்தது. மற்றது மன்மதன் சிவபெருமான் பேரில் மலர் பாணங்களை எய்தது. இவற்றில் சிவபெருமான் உவந்தது எது என்ற வினவை எழுப்பி நம்மை விடை காண வைக்கிறார். பாடல் வருமாறு:-

மாசற்ற நெஞ்சுடையார்
வன்சொல் இனிது ஏனையவர்
பேசுற்ற இன்சொல்
பிறிதென்க-ஈசற்கு
நல்லோன் எறி சிலையோ
நன்னுதால் ஒண் கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

இதில் சொல்லப்பெற்ற சாக்கியர் அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவர். அவர் வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் கூறி யாங்கு காண்போம்.

திருச்சங்க மங்கை என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர் சாக்கியர். புத்தசமயத்தைச் சார்ந்தவர். பிறப்பு இறப்புக் களை ஒழிக்கும் பெருமுயற்சியில் தலைநின்றார். “கல்வியில் கரையிலாத காஞ்சி”, “முத்திதரும் நகர் ஏழுள் முக்கியமாம் கச்சி” என்றெல்லாம் உச்சிமேல் புலவர் மெச்சிக் கூறும் கச்சியம்பதி யாகிய காஞ்சிபுரத்தை யடைந்தார். அருங்கலை நூல்கள் பல ஓதினார். சிவனெறியே நன்னெறி யென்று தெளிந்தார். எந்த நிலையிலும் எந்தக் கோலத்திலும் சிவன் தாளை மறவாதிருந்தால் போதுமென்று உணர்ந்தார். தன் புத்தசமய வேடத்தை மாற்றிக் கொள்ளவில்லை. நாள் தோறும் சிவலிங்கத்தைக் கண்டபின் உணவு உண்பதென்று நியமனம் பூண்டார். அங்கிருந்த கல்லை எடுத்து இலிங்க மூர்த்தி மேல் எறிந்தார். தொடர்ந்து அங்ஙனமே செய்து வந்தார். ஒருநாள் கல்லெறி வழி பாட்டை மறந்து உண்ணப் போனவர், நினைவு வர, கல் ஒன்றை எடுத்துக் கொண்டு விரைந் தார். இதையறிந்த எங்கும் நிறைந்த பரம் பொருளாகிய எம்பெருமான் உமாதேவி யாருடன் அவருக்குக் காட்சியளித்தார். நாயனாரும் சிரமேல் கரங்கூப்பி வணங்கினார். திருவருளால் சிவலோகத்தில் பழஅடியாராகும் பாங்கு பெற்றார்.

வேற்றுச் சமயத்தைச் சார்ந்த சாக்கியர் சிவனடியாரான வரலாற்றைக் கூறும்போது சைவ சித்தாந்தத்தின் தலைசிறந்த கருத்தைக் கூறும் பாடல் உளங்கொண்டு மகிழத் தக்கது.

“செய்வினையும் செய்வானும்
அதன் பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும்
விதித்த பொருள் எனக் கொண்டே
இவ்வியல்பு சைவ நெறி
அல்லவற்றுக்கில்லை என
உய்வகையாற்பொருள் சிவன்
என்றருளாலே உணர்ந்தறிந்தார்”

---

குறிப்பு:1-2-76 அன்று வரும் சாக்கிய நாயனார் திருநட்சத்திரத்தை யொட்டி இக்கட்டுரை வெளிவருகிறது.

க. கலியாணம், எம்.ஏ., டிப்.எக்கான்.,




# (4) கண்ணன்

தளர் நடைப் பருவம்

ஆயர்பாடியில் யசோதை வீடு. குழந்தை கண்ணன் தத்தித் தத்தித் தளர் நடையிட்டு வருகிறுன். சங்கிலிகளால் பிணிக்கப்பட்ட மத யானை அச்சங்கிலிகளை யறுத்துக்கொண்டு மெதுவாக அசைந்து நடந்து வரும்போது அறுபட்ட சங்கிலிகள் சலார் பிலார் என்று ஒலிக்குமல்லவா! அதுபோலக் கண்ணன் தளர் நடையிட்டு வரும்போது அவன் காலில் அணிந்துள்ள பாதச் சலங்கைகள் கிண் கிண் என்று ஒலிக்கின்றனவாம். அவன் இடையிற் கட்டிய சிறுமணிகள் நடைக்கேற்பத் தாளமிட்டனவாம். மேலும், அவன் புன்முறுவலோடே நடந்து வருகிறுன். கரிய நிறமுடைய கண்ணனது வாய் செந்தாமரைப் போல் சிவந்து காணப் படுகிறது. அவன் சிரிக்கும்போது வெண்மையான பற்கள் பிரகாசிக்கின்றன. இக்காட்சியைக் கண்ட யசோதை மனம் பூரித்து மகிழ்ந்தாளென்கிறுர் ஆழ்வார். உண்மையில் பெரியாழ்வார் யசோதையாக மாறிக் கண்டு அனுபவித்த காட்சியே இது. பாடலைப் பார்ப்போம்.

தொடர்சங் கிலிகை சலார்பிலா ரென்னத்
தூங்குபொன் மணி யொலிப்ப,
படுமும் மதப்புனல் சோர வாரணம்
பைய நின் றூர்வதுபோல்
உடன் கூடிக் கிண்கிணி யாரவரிப்ப
உடை மணி பறை கறங்க
தடந்தா ளிணைகொண்டு சார்ங்க பாணி
தளர் நடை நடவானே.

செக்க ரிடை நுனிக் கொம்பில் தோன்றும்
சிறுபிறை முளைபோல,
நக்க செந்துவர் வாய்த் திண்ணை மீதே
நளிர்வெண் பல்முளையிலக,
அக்கு வடமுடுத் தாமைத் தாலிபூண்ட
அனந்த சயனன்,
தக்க மாமணி வண்ணன் வாசுதேவன்
தளர் நடை நடவானே.

நீராட்டம்

கண்ணன் வளர்ந்து விட்டான். ஆயர்பாடியிலுள்ள வீடுகளிலெல்லாம் வெண்ணெய் களவு போகிறது. தயிர்க் குடங்களும், பால் குடங்களும் சாய்க்கப்படுகின்றன. ஆம்! கண்ணனும் தோழர்களுமாகச் சேர்ந்து செய்யும் வேலையல்லவா! இப்படிக் களவு செய்து உண்டு மகிழ்ந்த கண்ணன். கையைக் கழுவாமல் உடம்பெல்லாம் தடவிப் பூசிக் கொண்டான். அதோடு புழுதியில் தோழர்களோடு விளையாடிக் களிக்கிறுன். வீட்டுக்கு வந்து அப்படியே உறங்கி விடுகிறுன். கண்ணன் திருமேனியில் வெண்ணெயின் முடை நாற்றம். அழுக்கேறிய உடம்பு. காண்கிறுள் யசோதை. கண்ணனுக்கு எண்ணெய்க் காப்பு இடவேண்டுமென்று எண்ணுகிறுள். நெல்லியின் இலைகளை இட்டுக் காய்ச்சி நீரைக் கடாரத்தில் நிறைத்து வைக்கிறுள். மஞ்சளும், செங்கழு நீரின்

கா. அ. மணவாளன், எம்.ஏ., பி.ஓ.எல்.

மாலையையும், பரிமளமான சந்தனத்தையும், கண்களுக்கு இடவேண்டிய கருமையையும் ஒருங்கே கொண்டு வைக்கிருள். இவைகளை யெல்லாம் கண்டான் கண்ணன். ஓடி ஒளிந் தான்; யசோதை தேடினுள். அகப் படவில்லை. சுற்று முற்றிலும் பார்த்து நீராட வேண்டிக் கூவி அழைக்கிருள். ஆம்! யசோதை பாவனை யில் பெரியாழ்வார்தான் தாயாய் நின்று அழைக்கின்ருர்.

வெண்ணெ யளைந்த குணுங்கும்
 விளையாடு புழுதியுங் கொண்டு
திண்ணென விவ்விரா வுன்னைத்
 தேய்த்துக் கிடக்கநா னெட்டேன்,
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங்
 கெத்தனை போதுமி ருந்தேன்,
நண்ண லரிய பிரானே !
 நாரணு! நீராட வாராய்.

கன்றுக ளோடச் செவியில்
 கட்டெறும் புபிடித் திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய்
 திரட்டி விழுங்குமா காண்பன்,
நின்ற மராமரம் சாய்த்தாய்!
 நீபிறந் ததிரு வோணம்
இன்று, நீ நீராட வேண்டும்
 எம்பிரான்! ஓடாதே வாராய்,

பேய்ச்சி முலையுண்ணக் கண்டு
 பின்னையும் நில்லாதென் னெஞ்சம்,
ஆய்ச்சிய ரெல்லாருங் கூடி
 அழைக்கவும் நான்முலை தந்தேன்,
காய்ச்சின நீரொடு நெல்லி
 கடாரத்திற் பூரித்து வைத்தேன்
வாய்த்த புகழ் மணிவண்ணு
 மஞ்சனமாட நீ வாராய்

என்றெல்லாம் கண்ணனை நீராட அழைத்த தாக ஆழ்வார் யசோதையாக மாறிக் கூப்பிடும் அழகை எப்படித் தான் போற்றுவது !

### பூச் சூட்டல்

எப்படியோ ஒரு வகையாக நீராட்டம் முடிந்தது. கண்ணன் காலையிலேயே மாடு களையும் கன்றுகளையும் மேய்க்கப் போய் விட்டான். ஆனல் ஊரில் உள்ளவர்களோ எங்கள் வீட்டுப் பானையில் பாலைக் காணும்! கண்ணன்தான் திருடி உண்டான் என்று சாதிக்கிருர்கள். யசோதையோ அருமையாகத் தானே தொடுத்து வைத்த செண்பக மாலையை யும் செழுங்கழுநீர் மாலையையும், மற்றும் மல்லிகையும், பாதிரியம், கருமுகையும் புன்னை யும், குருக்கத்தியும் இருவாட்சியுமாகிய இனிய நறுமணமுள்ள மலர்களாலான மாலைகளை யெல்லாம் கண்ணன் சூட்டிக் கொள்ளாமல் அயலார் ஏசும்படி கானகம் சென்ருனே என்று வருந்துகிருள். அப்பொழுது கண்ணனும் வந்து விட்டான். தேனில் இனிய பிரானே என்று அவனைக் கூவி அழைக்கிருள்.

“ மருவி மணங்கமழ்கின்ற
 மல்லிகைப்பூச் சூட்டவாராய் ”

என்றும்,

“ பச்சை தமனகத் தோடு
 பாதரிப்பூச் சூட்டவாராய்

என்றும்,

“ தெள்ளிய நீரில் எழுந்த
 செண்பகப்பூச் சூட்டவாராய்

என்றும் பலவிதமாகக் கொஞ்சிக் கொஞ்சிப் பூச்சூட்ட அழைக்கும் பாங்கினைத்தான் என னென்பது?

### காப்பிடல் (காப்பு-ரக்ஷை)

கண்ணன் கன்றுகளை மேய்த்து வருகிறேன் என்று சொல்லிப் போனன். மாலைப் பொழுதாகி யும் வரவில்லை. அதற்குள் ஊராரெல்லாம் கண்ணன் செய்த தீமைகளை யெல்லாம் அடுக் கடுக்காகச் சொல்லிக் கொண்டு வந்து நின்ற னர். யசோதை கண்ணனை நினைந்து கலங்கு கிருள். இவ்வளவு நேரமாகியும் கண்ணன் வரவில்லையே! இவர்களோ இப்படிக் கூறுகிருர் களே! கண்ணு உனக்குக் காப்பிட வேண்டும் விரைந்து வாராய் என்று கூப்பிடுகிருள்.

‘இச்சிறு பெண்களுடைய மணற் சோற்றை யும் மனல் வீட்டையும் நீ காலால் சிதைத்துச் சென்று விட்டாய். அதனல் நான் உன்னைக் கோபிப்பேன்; அடிப்பேன் என்று சாப்பிடா மலே ஓடி விட்டாயோ! பயப்படாதே, இப் பொழுது நான் ஒன்றும் செய்ய மாட்டேன். உனக்குத் தீங்கு வராமல் சாப்பிடவே அழைக் கிறேன் வா, என்கிருள்.

செப்போது மென்முலை யார்கள்
சிறுசோறு மில்லும் சிதைத்திட்டு
அப்போது நானுரப் பப்போம்
அடிசிலு முண்டிலை யாள்வாய்
முப்போதும் வானவ ரேத்தும்
முனிவர்கள் வெள்ளறை நின்ருய்,
இப்போது நானென்றும் செய்யேன்
எம்பிரான்! காப்பிட வாராய்.

என்று கூப்பிடுகிருள்.

மேலும் ஒருநாள் கண்ணன் தன் தோழர்களோடு விளையாடிக் கொண்டிருக்கையில் திடீரென்று மண்ணை வாரி அவர்கள் கண்களில் தூவியும் அவர்கள் ஏனடா எங்கள் கண்களில் மண்ணைத் தூவிஞய்? என்று கேட்ட பொழுது காலாலே உதைத்தும் நையப் புடைத்தும் போய் விட்டாஞம். இதை அவ்வூர் பிள்ளைகள் கூட்டமாக வந்து யசோதையிடம் முறையிட்டார்களாம். அதைக் கேட்ட யசோதை அவர்களைச் சமாதானப்படுத்தி யனுப்பி விட்டு, கண்ணனைக் காப்பிட அழைப்பதாகப் பெரியாழ்வார் பாடிய மற்ருெரு பாடலைக் காண்போம்.

“ கண்ணில் மணல் கொடுதூவிக்
காலிஞற் பாய்ந்தனை யென்றென்று
எண்ணரும் பிள்ளைகள் வந்திட்டு
இவரால் முறைப்படுகின்ருர்
கண்ணனே வெள்ளறை நின்ருய்
கண்டா ரோடே தீமை செய்வாய்
வண்ணமே வேலைய தொப்பாய்
வள்ளலே காப்பிட வாராய்.

கண்ணன் குறும்புகள்—லீலைகள்

ஒரு நாள் கண்ணன் ஒரு இடைச்சியின் வீட்டில் புகுந்து கலத்தில் வைத்திருந்த வெண்ணெய் முழுவதையும் உண்டு விட்டு, அதோடு போகாமல் அவ்வெண்ணெய்ப் பாத்திரத்தையும் இடை மாதர் கண் முன்பாகவே அருகேயிருந்த மாலைப் பாறையின் மீது வீசி எரிந்து, ஆஹா! ஓசை நன்ருக இருக்கிறது என்று சொல்லி விட்டு ஓடி விட்டாஞம். அம்மம்ம! அவன் தீம்புகளை எங்களால் பொறுக்க முடியவில்லை என்கிருர்கள்.

வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை
வெற்பிடையிட்டு அதனேசை கேட்கும்
கண்ணபிரான் கற்ற கல்வி தன்னைக்
காக்ககில்லோம் உன் மகனைக் காவாய்
புண்ணிற் புளிப் பெய்தா லொக்கும் தீமை
புரை புரை யாலிவை செய்யவல்ல
அண்ணற் கண்ணுனோர் மகனைப் பெற்ற
அசோதை நங்காயுன் மகனைக் கூவாய்.

மற்ருெரு நாள் ஆயர்பாடியில் கறந்த பாலைக் காய்ச்சுவதற்காக அடுப்பின்மேல் வைத்து விட்டு நெருப்பு வாங்கி வருவதற்காகப் பக்கத்து வீட்டுக்குப் போனுளாம் ஒருத்தி. அங்குச் சிறிது நேரம் பேசி விட்டு வந்து பார்க்கையில் காவலாக இருந்த அவளுடைய இமைகளை ஏமாத்தி விட்டு அத்தனை பாலையும் சாய்த்துப் பருகிப் போய் விட்டாஞம்.

இது போலவே மற்ருெரு வீட்டில், கட்டிப் பாகும் லட்டும், சீடையும், எள் உருண்டையும், சீடையுமாகிய இனிய தின்பண்டங்களையெல்லாம் தன் சொந்த வீடாயிற்றே என்று வைத்துப் போனுளாம் ஒருத்தி. அவ்வீட்டுக்குள்ளே கண்ணன் புகுந்து ஒன்றையும் வைக்காமல் சாப்பிட்டாஞம். அதோடு மனம் நிறைவு பெருமல் அவன் வீட்டு உறியிலிருந்த வெண்ணெயையும் துழாவி உண்டாஞம். இப்படிப்பட்ட தீம்பிலே வளர்ந்திருக்கும் உன் பிள்ளையான கண்ணனை நீ கண்டிக்க வேண்டாமோ ! பிள்ளை வளர்க்கும் லக்ஷணம் இதுவோ என்று ஏசுவதாகவும் ஒரு பாடல் அழகாக அமைந்துள்ளது.

கன்னலி லட்டு வத்தோடு சீடை
காரெள்ளினுண்டை கலத்திலிட்டு
என்னகமென்று நான் வைத்துப் போந்தேன்
இவன் புக்கு அவற்றைப் பெறுத்திப்
போந்தான்.
பின்னு மகம் புக்கு உறியை நோக்கிப்
பிறங்கொளி வெண்ணெயுஞ் சோதிக்
கின்ருன்
உன் மகன் தன்னை அசோதை நங்காய்
கூவிக் கொள்ளாயிவை யுஞ்சிலவே.

கண்ணன் வஞ்சக் கள்வன், மாமாயன் என்கிருள் மற்ருெருத்தி. ‘யசோதாய் உன் பிள்ளை செய்த தீமையைச் சொன்ஞல் கோபம் கொள்ளாதே ! இப்படியும் செய்யலாமா? ’

தூய தங்கத்தில் நகைகள் பண்ண முடியாது. அதில் தாமிரம் போன்ற கலப்பு ஏதாவது கொஞ்சம் போட்டால் நகை பண்ணுவதற்கு அது உதவுகிறது. அதே விதத்தில் மாயை கொஞ்சம் கலந்திருந்தால்தான் மனிதன் உலகில் வாழ்ந்திருக்க முடியும். உடல் இருக்கும் வரையில் சிறிதளவாவது மாயையும் இருந்து மனிதனை மயக்குகிறது. மாயை முற்றிலும் மறைந்துபோனால் மானுட சரீரம் இருபத்தொரு நாளுக்குமேல் நிலைத்திராது.

—ராமகிருஷ்ணபரமஹம்ஸர்

என்றுளாம். அதற்கு யசோதை 'அப்படி என்ன செய்து விட்டான் என் மகன்' என்று கேட்க, அவள் கூறுகிருள் "நான் வீட்டிலில்லாத பொழுது என் வீட்டில் புகுந்து என் பெண்ணைப் பேர் சொல்லி அழைத்தான் உன் மகன். அது மட்டுமா! அவளை ஏமாற்றி அவள் கையிலணிந்திருந்த வளையைப் பலாத்காரமாகக் கழற்றிக் கொண்டு போய் விட்டான்! இடைச் சேரித் தெருக்களில் நாவற் பழங்களை விற்று வந்தவளிடம் அவ்வளையைக் கொடுத்து விட்டுப் பழங்களை வாங்கித் தின்றுகொண்டிருக்கிருன். கேட்டால், எனக்கு ஒன்றும் தெரியாது என்று சிரிக்கின்ருன். இவனை என் செய்வது?" என்று புகார் கூறுவதாக ஒரு பாடல்.

சொல்லி லரசிப் படுதி நங்காய்
 குழலுடையனுன் பிள்ளை தானே
இல்லம் புகுந்து என் மகளைக் கூவிக்
 கையில் வளையைக் கழற்றிக் கொண்டு
கொல்லையினின்றுங் கொணர்ந்து விற்ற
 அங்கொருத்திக் கவ்வளை கொடுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு
 நானல்லேன் என்று சிரிக்கின்ருனே

ஆற்றங்கரையில்

யமுனை ஆற்றங்கரையில் மணலில் பெண்கள் விளையாடிக் கொண்டிருந்தார்களாம். அச்சமயம் கண்ணன் திடீரென்று அங்கே அவர்கள் மத்தியில் சென்ருனும். அவர்களோடு பேசுவது போல நடித்துக் கையிலிருந்து சேற்றை வாரி அவர்கள் கண்களில் வீசி விட்டு அவர்களுடைய வளையல்களையும், மேலாடைகளையும் வாரி அணைத்துக் கொண்டு காற்றைக் காட்டிலும் கடு வேகமாக ஓடி ஒளித்துக்கொண்டானும். பெண்கள் அவன் வீட்டு வாசலில் கூடிக் கெஞ்சிக் கேட்டும் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் மௌனமாய் இருந்து விட்டானும்.

மறுநாள் அப் பெண்கள் கண்ணனுக்குப் பயந்து யமுனையின் வேறு துறையில் இறங்கி நீராடிக் கொண்டிருக்கும் போது அவர்களுடைய புடவைகளை யெல்லாம் வேகமாகக் கவர்ந்து சென்று குருந்த மரத்தின் உச்சி மீதேறி அமர்ந்து விட்டானும். புடவைகளைத் தரும்படிகேட்டால் ஒரு பதிலும் சொல்லாமல் விளையாடுகிருனும் : பாடலைப் பாருங்கள்.

ஆற்றிருந்து விளையாடு வோங்களை
சேற்ருல் எறிந்து வளைதுகிற் கைக் கொண்டு
காற்றிற் கடியனுய் ஓடி யகம்புக்கு
மாற்ற முந்தாரானுலின்று முற்றும்
 வளைத் திறம் பேசானுலின்று முற்றும்

குண்டலம் தாழ குழல்தாழ நாண்தாழ
எண்டிசை யோரும் இறைஞ்சித் தொழுதேத்த
வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு
விண்டோய் மரத்தானுல் இன்று முற்றும்
 வேண்டவும் தாரானுல் இன்று முற்றும்

இப்படி அக்கண்ணன் செய்த தீம்புகளை யெல்லாம் ஆய்ச்சியர் யசோதையிடம் முறையிடும் பாவனையில் பெரியாழ்வார் பாடியுள்ள பாடல்கள் மிக்க சுவையுடையனவா யிருத்தலைக் காணலாம்.

(தொடரும்)

திருமுறை நெறி

கடமையைச் செய்! கடமையைக் கடவுள் வழிபாடெனச் செய்! ஒன்றிய உணர்வுடன் தொழிற்படு! ஆற்றலை ஆள்வினையில் காட்டு! செய்தொழிலைச் செப்பமுறச் செய்ய அறிவையும் ஆற்றலையும் நல்கி வழிகாட்டும்படி கடவுளைப் பிரார்த்தனை செய். இதுவே திருமுறை நெறி.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

நெஞ்சில் அழகும் நினைவில் அழகும் நினைப்புவழிச்
செஞ்சொல் அழகும் செயலில் அழகும் சிறந்துனது
கொஞ்சும் எழில்மலர்த் தாள்சேர்ந் திடவேண்டும் குன்றைமலை
விஞ்சும் வடிவழ காமுரு கானான வித்தகனே (93)

பழுத்த புல்மையும் பண்பாடும் என்றும் பதறிநெஞ்சம்
இழுத்த வழியெலாம் செல்லா திருக்கும் எழிலறிவும்
செழித்த மனமும்நின் சேவடிக் கன்பும் சிறந்துனையே
வழுத்தும் படிக்கருள் குன்றக் கடிமலை வாழ்முதலே. (94)

ஞானத் தெளிவும் நலமார் தொழிலும் நலிந்தவர்க்கிங்(கு)
ஆன உதவிசெய் ஆற்றலும் அன்பும் அறநெறியில்
வானம் துளங்கினும் மாறு நிலையும் மயூரகிரிக்
கோனே அருள்க குரைகழற் கேநெஞ்சம் கொண்டனனே. (95)

பெருமை சிறுமை இரண்டுமொன் றுக்கொளும் பேரறமாம்
ஒருமை மனமெனக் கீந்தருள் அந்த உறுதியொன்றே
திருவென் றுணர்ந்தேன் சிறுமனச் சூரன் செருக்கடங்க
ஒருவே லெடுத்தவா குன்றக் குடிமலை உத்தமனே. (96)

நன்றே வினையினும் தீதே வரினும்என் நாயகநீ
அன்றோ துணைஎனக் காரு மிலைநின் அடிமலரே
என்றும் துணையென் றிருப்பேன் அருள்க இளமயிலில்
இன்றே எழுவாய் இடர்களை வாய்குன்றை என்தெய்வமே. (97)

இன்பமும் வேண்டிலன் துன்பமும் வேண்டிலன் என்வரினும்
நின்பதம் ஒன்றே நினைந்திட வேண்டும் நிலைதவறின்
அன்பரு ளாலே அடித்துத் திருத்தி அரவணைத்தல்
என்கடம் பாவுன் எழிற்குண மன்றோ இறையவனே. (98)

முருகனே போற்றி முதல்வனே போற்றி முகில்புரையும்
அருள்மணி போற்றி அறுமுகா போற்றி அறியவொணுக்
குருபரா போற்றி குமரனே போற்றிகுன் றக்குடிவாழ்
ஒருவனே போற்றி உனையலால் இல்லை ஒருகதியே. (99)

ஆறு முகமும் பனிரண்டு தோளும் அருள்மலர்த்தேன்
சீறடி யும்வாழ்க செஞ்சுடர் வேல்வாழ்க சேவலொடு
ஏறு மயில்வாழ்க வள்ளிதெய் வானை இனிதுவாழ்க
கூறும் புகழடி யார்வாழ்க வாழ்க குவலயமே. (100)

முற்றிற்று